



















லீவ் வந்தால் எத்தனை ஆனந்தம்? "க்ளாஸ் ஒர்க்" இல்லை "ஹோம் ஒர்க் இல்லை. எப்பொவும் விளையாட்டு. மேலும் விளையாட்டு. அப்புறம் எனக்கு பிடிச்ச நிறைய ரஸ்னு.





I love you Rasna

Mudra:A.EAMR:5484 Tam

ஒவ்வொரு தாயும் அறிந்தது:
குழந்தையின் உணவிலே
பருப்பு மிக அவசியமாகும்.

# ஃபாரெக்ஸ்-வெஜ் மட்டுமே பருப்பின் நற்பயன்கள் அடங்கியதாகும்.



புரதச் சத்து நிரம்பிய ஃபாரெக்ஸ்-வெஜ், தானிய வகைகள், பாசிப்பருப்பு, தக்காளி, காரட் ஆகியவை அடங்கியதாகும். எளிதில் ஜீரணிக்கக் கூடிய உணவாகும்.




பருப்-
புடன்

**ஃபாரெக்ஸ்-வெஜ்**
சுவையுடன் வளரும் வழி.

GX.223 90. Tm R






# பைத்தியக்காரன்

முதலில் சர்க்கஸ் மோசக்காரனின் மர்மம். ஆம், கோமாளி தான் மோசக்காரன். சரியாகக் கண்டு பிடித்தவர்க்கு கரகோஷம்! துப்பறியும் புலிகள் இப்போது தம் BSASLR-களில் பைத்தியக்காரன் வாஸோவிச்சைத் தேடும் பணியில். 'நியூ ஸிட்டி'யை நாசமாக்க அவன் ஒரு பேபி UFO வைத்திருப்பதாகக் கூறுகிருர்கள் விஞ்ஞானிகள். துப்பறியும் புலிகளால் அவனைத் தடுக்க முடியுமா?

"பேபி, நாளை காலை 5 மணிக்கு நீயும் நானும் 'நியூ ஸிட்டி'யை வெடித்துப் தகர்க்கப் போகிருேம்" என்றது வாஸோவிச்சின் கீச்சுக்குரல். சுவருக்குப்பின் பதுங்கிய வண்ணம் அதைக்கேட்டனர் துப்பறியும் புலிகள்.

தன் கடிகாரத்தைப் பார்த்தவாறு அதைப் போலிருக்கும் மற்ருென்றை ஒரு குறிப்பிட்ட கால அளவில் வாஸோவிச் வைத்தான். பின் அதை UFO-வில் பொருத்திருன். UFO-வை கராஜில் விட்டுவிட்டு, உள்ளே மறைந்தான்.



### திட்டம் தீட்டப்பட்டது

பதட்ட நிலையைத் தளர்த்த, 'ஜோக்' அடிக்க முற்பட்டான் ரால்ஃப். "சும்மாயிரு ரால்ஃப், விளையாடக்கூடிய

விஷயமல்ல இது." என்றாள் பூஜா. திடீரென விபுல், யோசனை கிடைத்ததும் வழக்கமாகச் செய்வது போல், தன் BSA SLR-ன் மணியை ஒலித்தான். "ஏய்! இப்படிச் செய்தாலென்ன..." என விபுல் வினவ, மற்ற இருவரும் உற்சாகத்துடன் தலையாட்டினர்.

அடுத்த கணம் விபுல் சுவருக்கு அப்பால் பார்வையிலிருந்து மறைந்தான். ஒரு யுகமே முடிந்தது போலிருந்தது. விபுல் திரும்பினான், விநோதமான புன்னகையோடு. தம் BSA SLR-களை நிறுத்தி வைத்து, அவர்கள் காத்திருந்தனர். 4.15 மணிக்கு வாஸோவிச் வெளியே வந்து, 'ரிச்மன் க்ளிஃப்ஸ்' நோக்கிச் சென்றான். காற்று வேகமாக அடிக்க, மேடு பள்ளம் நிறைந்த பாறை



# வாஸோவிச்சின் மர்மம்

உச்சிக்குச் செல்லும் வழியை BSA SLR-களில் எளிதாகச் சமாளித்தனர் துப்பறியும் புலிகள்.

### காரியம் கைகூடியது

உச்சியில், வாஸோவிச் ஏற்கெனவே தன் UFO-வை நிலைப்படுத்தியிருந்தான். சரியாக 5 மணிக்கு, 'ரிமோட்'டில் உள்ள ஸ்விட்ச்சைப் போட்டான். ஒன்றும் நிகழவில்லை. துப்பறியும் புலிகள் புன்னகை புரிந்தனர்.

5.05 காரியம் வெற்றி.

BSA SLR-கள் ஜய ஒலி இசைக்க, திடுக்கிட்ட வாஸோவிச் தோற்கடிக்கப்பட்டான். வாஸோவிச்சின் கண்களுக்கு முன்னால், களிப்புடன் தன் மணிக்கட்டை ஆட்டினான் விபுல். "உன்னை..." எனச் சீறினான் வாஸோவிச்.

'நியூ ஸிட்டி' எப்படி காப்பாற்றப்பட்டது? ஊகியுங்கள் பார்க்கலாம்!

*பைத்தியக்காரன் வாஸோவிச்சின் மர்மம் விளங்க, அடுத்துவரும் 'நட்சத்திர குறிகொண்ட ஷூ'வின் மர்மம் படியுங்கள். அதுவரை BSA SLR-ல் உங்கள் உல்லாச சவாரி தொடரட்டும்.*








Mudra:M:TI:4422Tam




# மேகி கிளப் பரிசுகள், இலவசம். வனவிலங்குகளுடன் பெறுவீர், உல்லாசம்!



மேகி "ஆபரேஷன் வைல்ட் லை..ப்"
விளையாட்டில் வனவிலங்குகளைக்
காப்பாற்றுங்கள்!




மேகி "கிங் ஆ:.ப் தி ஜங்கிள்
கேம்" விளையாட்டில் வனத்தை
வெல்லுங்கள்!

குழந்தைகளே! மேகி கிளப்பில் சேருங்கள். வருடம் பூராவும் கொண்டாட்டம் பெறுங்கள். நியூஸ் லெட்டர்கள், பரிசுகள், விளையாட்டுகள் இன்னும் நீங்கள் செய்வதற்கு எத்தனை எத்தனையோ!

இந்த சின்னத்தை மேகி நூடுல்ஸ் 5 காலி உறைகளின் முன்பக்கத்திலிருந்து வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள். உங்கள் பெயர், விலாசத்துடன் உங்களுக்குப் பிடித்த பரிசையும் குறிப்பிட்டு எழுதுங்கள். நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால் உறுப்பினர் எண்ணையும் குறிப்பிட மறந்துவிடாதீர்கள். இதுவரை உறுப்பினர் ஆகவில்லை என்றால் இப்போது ஆகலாம்.

மேலே குறிப்பிட்ட விவரங்களை அனுப்பும்போது, உறுப்பினர் ஆக விரும்புவதாகவும் எழுதுங்கள் நாங்கள் உங்கள் பரிசுப் பொருளுடன் இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் அனுப்புவோம்.

எங்கள் விலாசம் :
**மேகி கிளப்**
தபால்பெட்டி எண் : 5788,
புது டில்லி-110 055.




மேகி "பர்ட் ஹவுஸ்"
உருவாக்குங்கள்!



மேகி "ஜாது ஜங்கிள்" மூலம்
சொந்தமாக ஒரு காட்டை உருவாக்குங்கள்!




ஆர்ச்சி காமிக்



மேகி வேர்ல்ட் ஆ:.ப் அனிமல்ஸ் வினாடி வினா!
நீங்கள் பெறும் ஒவ்வொரு 3 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு மேகியின் "வேர்ல்ட் ஆ:.ப் அனிமல்ஸ்" வினாடி வினாவை உங்களுக்கு நாங்கள் அனுப்புவோம். அதில் வன விலங்குகளைப் பற்றிய வியப்பூட்டும் தகவல்கள் நிறைந்துள்ளன. விளையாட்டில் விவரங்கள் தரப்பட்டுள்ளன.









மேலும் பெறுவீர்: இதுவரை "லாஸ் ஆ:.ப் ஜங்கிள் கேம்" நீங்கள் பெறவில்லையென்றால், இப்போது பெற்றுக்கொள்ளுங்கள்!

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## மக்களின் சக்தி

இந்திய மக்களை ஈடுபடுத்திய இரு முக்கிய நிகழ்ச்சிகள் 1991ம் ஆண்டின் முதல் பாதிப்பகுதியில் நிகழ்ந்துள்ளன. பத்து ஆண்டு களுக்கு ஒரு முறை கணிக்கப்படும் மக்கள் தொகைக் கணக் கெடுப்பு மார்ச் மாதத்தில் முடிவுற்றது ஒன்றாகும். இதன்படி 1981ல் இருந்த மக்கள் தொகையைவிட இம்முறை 23.5 சதவீதம் கூடியுள்ளது. தற்போதைய 84.39 கோடி மக்கள் கொண்ட இந்தியா உலகிலேயே மிக அதிக மக்கள் தொகையுள்ள நாடுகளில் இரண்டாவது இடத்தை வகிக்கிறது.

எப்போதோ ஒருமுறை என்ற இந்த நிகழ்ச்சிக்காக மக்களைக் கணக்கு எடுப்பதில் நீண்ட காலத் தயாரிப்பும் திட்டமிட்டுச் செயல் படுதலும் வேண்டும். ஆனால் நேர்மாறாக இடைக்காலத் தேர்தல் என்பது திடீரென வருவதும் சில சமயங்களில் தவிர்க்க முடியாத அரசியல் திருப்பங்களால் வந்தும் விடுகிறது. மத்திய அரசாக இருந்த சந்திரசேகர் மந்திரிசபைதான் நிலையற்றது என்பதைக் கண்டு ஒரு நிலையான அரசாங்கம் ஏற்பட இடைக்கால தேர்தலை நடத்த முடிவு செய்தது.

இந்த இதழ் உங்கள் கைக்குக் கிடைக்கும்போது புதிய மத்திய அரசும் சில மாநிலங்களில் புதிய அரசுக்களும் ஏற்பட்டிருக்கக் கூடும். 1989 தேர்தலுக்குப் பின் இந்தத் தேர்தல் அவசியமா என்று வாதப் பிரதிவாதன்கள் சிறிது காலத்திற்கு நடந்து கொண்டே இருக்கும். ஆனால் அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு நிலையான அரசை அளிக்கும் சக்தி மக்களிடம்தான் உள்ளது.

மதிமுகம்: 88 ஜூன் 1991 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ. 3-00 வருட சந்தா: ரூ. 36-00






SANKAR



# வாசகர்களுக்கு வேண்டுகோள்

'அம்புலிமாமா'வை வெளியிடப் பயன்படும் நியூஸ் பிரிண்ட் பத்திரிகைக் காகிதத்தின் விலை அண்மையில் மிக மிக உயர்ந்து விட்டது. ஆயினும் நம் பத்திரிகையின் விலையை உயர்த்தாமலிருக்க வெகுவாகப் பாடுபட்டோம். ஆனால் தற்போதுள்ள விலையில் பத்திரிகையை வெளியிடுவது இயலாது என்ற நிலை உருவாகி இருப்பதால் அடுத்த இதழிலிருந்து 'அம்புலிமாமா'வின் விலையை அதிகரித்தே ஆக வேண்டியுள்ளது. இதனால் ஜூலை '91 முதல் 'அம்புலிமாமா' தனிப் பிரதி விலை ரூ. 4-00, வருட சந்தா ரூ. 48-00 என ஆகிறது.

இந்த சந்தர்ப்பத்தில் நல்ல கதைகளையும், தக்க தலைப்புகளையும் கொண்டு 'அம்புலிமாமா'வை மேலும் கவர்ச்சிகரமாக அமைத்து வெளியிட்டு வருவோமென வாசகர்களுக்கு உறுதி கூறுகிறோம்.

வாசகர்களும், ஏஜண்டுகளும் தற்போதைய நிலையை உணர்ந்து எப்போதும் போல எங்களுக்குத் தங்கள் ஒத்துழைப்பைக் கொடுத்து வருவார்கள் என்றே நம்புகிறோம்.

—வெளியிடுவோர்

# ஒருமைப்பாட்டிற்கு ஆதரவு




சோவியத் அதிபர் கொர்ப்பசேவ் தம் நாட்டு மக்களிடம் கேட்ட கேள்விக்குப் பெரும்பான்மையோர் 'ஆம்' என்ற பதிலேயே அளித்துள்ளனர்.

ஒரு பிரச்னே மீது மக்களின் பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தைவிட மக்கள் எண்ணக் கணிப்பின் வாயிலாக மக்களிடமிருந்தே நேராக அறியும் ஜனநாயக முறையை ஆங்கிலத்தில் 'ரெபராண்டம்' என்பார்கள். மக்கள் முன் ஒரு கேள்வியைக் கேட்டு அதற்கு ஆம் அல்லது இல்லே என்ற விடையை வாக்கெடுப்பின் வாயிலாகப் பெற்று முடிவை அறிவதுதான் மக்கள் எண்ணக் கணிப்பு.

ரஷ்ய அதிபர் கோர்ப்பசேவ் மக்கள் முன் வைத்த கேள்வி இதுதான்.

சோவியத் ரஷ்யாவின் சமமான சுதந்திரத் தன்னிச்சைக் குடியரசுகள் ஒரு ஒன்றியமாகச் செயல்பட வேண்டும் என நீங்கள் விரும்புகிறீர்களா?

இக்கேள்விக்குப் பெரும்பான்மையான ரஷ்ய மக்கள் 'ஆம்' என்ற விடையை அளித்தனர். முதன்முதலாக கொர்ப்பசேவ் நடத்திய மக்கள் எண்ணக் கணிப்பிலிருந்து சோவியத் குடியரசுகள் ஒரு ஒன்றியமாகச் செயல்பட வேண்டும் என்று தெரிய வந்துள்ளது.

அது சரி, இந்த விஞவை சோவியத் அதிபர் கோர்ப்பசேவ் ரஷ்ய மக்களிடம் ஏன் கேட்க வேண்டி வந்தது? கோர்ப்பசேவ் பெர்ஸ்டர்ரோயகா, போன்ற சில தாராள மனப்பான்மை கொண்ட முறைகளே அமல்படுத்த முயன்ருர். இவற்றின்படி மத்தியக் கட்டுப்பாடு தளர்ப்பு, சுதந்திரமாக எண்ணும் மேற்கத்திய அரசாங்கங்களுடன் நேச உறவு மற்றும் பல திடீர் மாற்றங்கள் ஏற்பட்டன. உணவுப் பொருள்களின் பற்ருக்குறை, பொருளாதார நெருக்கடி முதலியன தலேதூக்கவே சில குடியரசுகள் சோவியத் குடியரசு ஒன்றியத்திலிருந்து பிரிந்து போக வேண்டும் என்ற வாதத்தைக் கிளப்பின. இதனுல் ஏற்பட்ட கொந்தளிப்புகளே அடக்கச் சில இடங்களில் பலப்பிரயோகமும் செய்ய வேண்டியதாயிற்று. அப்படியும் பிரச்னே தீர்ந்தபாடில்லே. இதையெல்லாம் கண்டுதான் கோர்ப்பசேவ் மக்கள் எண்ணக் கணிப்பை நடத்திப் பார்த்தார்.




இந்தக் கணிப்பில் பெரும்பான்மை ரஷ்ய மக்கள் அதிபருக்குச்சாதகமாகவே அதாவது ஒன்றியமாக இருக்க வேண்டும் என்றே வாக்களித்தனர். இந்தக் கணிப்பில் ஆறு சிறிய குடியரசுகள் கலந்து கொள்ளவில்லை. ரஷ்யாவின் 90 சதவீத மக்கள் வசிக்கும் மற்ற ஒன்பது குடியரசுகள் இந்தக் கணிப்பில் கலந்து கொண்டு ஒன்றியமாக இருக்க வாக்களித்தன. இதனால் பிரிவினைப் போக்கு சற்று குறைந்து விடும் மேலும் இந்த வாக்கெடுப்பால் சோவியத் மக்கள் அதிபர் கோர்ப்பசேவிற்குத் தம் ஆதரவையும் ஒருவாறு தெரிவித்துள்ளார்கள் எனலாம். நூறு இனங்களுக்கு மேற்பட்டு வாழும் சோவியத் மக்கள் தாமே சிந்தித்து சுயமாக முடிவு எடுக்கும் ஆற்றல் பெற்றவர்கள் என்பதற்கு இந்த வாக்கெடுப்பு ஒரு எடுத்துக்காட்டு.



# இதுவா இரகசியம்!

கிராமத்தில் விவசாயம் செய்து கொண்டிருந்த வேலன் பட்டணத்தில் தன் தங்கை மீனாட்சி எப்படிக் குடித்தனம் செய்கிறாள் என்பதைக் காண்பதற்காகத் தன் ஊரிலிருந்து கிளம்பிச் சென்றான். மீனாட்சி சுய நலம் கருதுபவள் என்பது அவனுக்குத் தெரியும். அவள் யாரையும் ஒண்டவிட்டது இல்லை. அவள்தன் தாய் மாமனை மணந்திருந்தாள்.

வேலன் பட்டணத்தில் தன் மைத்துனன் மாணிக்கத்தின் வீட்டைக் கண்டு பிடித்துப் போய்ச்சேர்ந்தான். பெரிய வசதியான வாடகை வீடு. அவன் போன நேரம் சாப்பாட்டுவேளை. அதனால் மாணிக்கம் அவனைச் சாப்பிடக் கூப்பிட்டான்.

கைகால்களை அலம்பிக் கொண்டு சமையலறைக்குள் சென்ற வேலன் மூன்று தட்டுகள் வைக்கப்பட்டிருப்பது கண்டு "நான் வருவது முன் கூட்டியே தெரியுமா? எனக்கும் பரிமாறப்பட்டு தட்டு வைக்கப்பட்டிருக்கிறதே" என்று ஆச்சரியப்பட்டவாறே கேட்டான்.

மாணிக்கமும் "அது உனக்காக அல்ல. மீனாட்சி மாமியாருக்காக தினமும் தட்டில் உணவு பரிமாறி வைக்கிறாள். போனவருடம் இறந்து போன அவள் தினமும் யார்கண்ணிலும் படாமல் வந்து தன் மருமகளிடம் பேசிவிட்டும் சாப்பிட்டு விட்டும் போய் விடுகிறாள். நீ இப்போது அந்த தட்டின் முன் உட்கார்ந்து அந்த உணவைச் சாப்பிடு. மீனாட்சி சாப்பிட்டபிறகு அந்தத் தட்டை அலம்பி அதில் உணவு பரிமாறி மூடி வைத்துவிட்டும். இரவில் அவள் மாமியார் வந்து சாப்பிட்டு விட்டுப் போய்விடுவாள்" என்றான்.

வேலனுக்கு அதிசயமாய் இருந்

—ரம்யா குருமூர்த்தி—



தது. மீனாட்சியின் மாமியாரும் மாமனாரும் அவனுக்கும் மாமியார் மாமனாரே! ஆனால் ஒரு நாள் கூட இறந்துபோன அவர்கள் அவன் வீட்டிற்கு வந்தது இல்லையே இதில் ஏதோ இரகசியம் இருக்கிறது என்றும் அதைக் கண்டுபிடிப்பது என்றும் அவன் தீர்மானித்துக் கொண்டான்.

அன்றிரவு வேலனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. புரண்டு புரண்டுப் படுத்தவன் நள்ளிரவில் மீனாட்சி எழுந்து சமையலறைக்குள் போவதைப் பார்த்தான். அவனும் பூனை போல் சென்று மறைந்து நின்று அவள் என்ன செய்கிறாள் என்று பார்த்தான். அவள் மாமியாருக்காக என்று தட்டில் பரிமாறி வைத்த உணவை அவள் எடுத்து 'அபக்' 'அபக்'கென்று விழுங்கிக் கொண்டிருந்தாள்.

இதுவா விஷயம் என நினைத்து வேலன் திரும்பி வந்து படுத்துக் கொண்டான். மறுநாள் மத்தியானம் அவனும் மாணிக்கமும் சாப்பிடும் போது மீனாட்சி யாரிடமோ பேசுவது போலப் பேசிவிட்டுத் தன் கணவனிடம் "உங்கள் அம்மா தன் மாப்பிள்ளையை உடனே ஊருக்குப் போகச் சொல்கிறார். இங்கே அதிக நாட்கள் தங்கக் கூடாதாம்" என்றாள். மாணிக்கமும் "அப்படியா சொன்னாள்?" எனவே அவளும் ஆமாம் என்று அடித்துக் கூறினாள்.

அப்போது வேலன் "சரி, என் வேலை இன்று முடிந்து விடும். நான் நாளைக்காலையிலேயே கிளம்பிப் போகிறேன்" என்றான். மீனாட்சியும் "சரி அப்படியே செய்" என்று கூறியதும் மாணிக்கமும் திருப்தி அடைந்தான். வேலனும் தன் வேலையாக வெளியே சென்றான்.

மாலை வேலன் கடைத்தெரு வழியாக வந்து கொண்டிருந்த போது மீனாட்சியும் மாணிக்கமும் வந்து தன்முன் நிற்பதைக் கண்டான். அப்போது மாணிக்கம் தலையைச் சொறிந்து கொண்டே "அத்தான்! ஒரு முன்னூறு ரூபாய் இருந்தால் கொடு. அடுத்த மாதச் சம்பளம் வந்ததும் இந்தத்

தொகையை அனுப்பி விடுகி றேன்'' என்ருன். வேலனும் முன் னூறு ரூபாயை எடுத்துக் கொடுத் தான்.

அப்போது மாணிக்கம் "அடுத்த வீட்டில் நம் வீட்டுச் சாவியைக் கொடுத்து நீ வந்தால் கொடுக்க சொல்லி இருக்கிறேன். நீ முன்ன தாக வீட்டிற்குப் போய் இரு. நாங்கள் வரத் தாமதம் ஆகலாம்'' என்ருன். வேலனும் மாணிக்கத் தின் வீட்டிற்குச் சென்ருன்.

அடுத்த வீட்டிலிருந்து சாவியை வாங்கி வீட்டைத் திறந்து உள்ளே சென்ற அவன் "இவர்கள் இரண்டு பேர்களுக்கும் இவ்வளவு பெரிய வீடும் இவ்வளவு ஆடம்பரச் சாமான் களும் எதற்கு? இந்த மாணிக்க மும் மீனுட்சி சொல்வதற்கெல்லாம் 'பூம் பூம்' மாடு போலத் தலையை ஆட்டுகிருனே. இன்று என்னிடம் பணம் வாங்கிக் கொண்டது கூட ஏதாவது அநாவசியச் செலவுக்குத் தான் போலிருக்கிறது. பார்க் கலாம்'' என நினைத்துக் கொண் டான்.

இரவு பத்து மணிக்குத்தான் மாணிக்கமும் மீனுட்சியும் வந்தார் கள். மீனுட்சி உள்ளே வந்ததும் ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டு அதன்மீது தான்அப்போது வாங்கி வந்த பட்டுப்புடவையை விரித்துப் போட்டு "உங்களுக்குப் பிடித்திருக் கிறதா?'' என்று அதன்முன் நின்று கண்ணை மூடிக் கொண்டு கேட்டாள். மாணிக்கமும் "அம்மா என்ன சொல்கிருள்?'' என்று கேட்டான். மீனுட்சியும் சற்று நேரத்திற்குப்





பின் "எனக்குப் பிடித்திருந்தால் அவளுக்கும் பிடித்ததுதான் என்கிருள். ஏனெனில் அவளுக்கு முதலில் படைத்தாலும் நான் தானே அதை உடுத்திக் கொள்ளப் போகிறவள் என்கிருள்" என்ருன்.

மாணிக்கமும் "ஆமாம், சரி தான்" என்ருன். வேலனுக்கோ அவனது அறியாமையைக் கண்டு இரக்கமே ஏற்பட்டது. தன் தங்கை மீனுட்சி தன் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள இந்த மாமியார் வந்து பேசும் நாடகம் போடுகிருள் என்பது விளங்கிவிட்டது. அதை நிறுத்த அன்றிரவு அவர்கள் சாப்பிடும் போது வேலன் யாரிடமோ பேசி "உம் அப்படியா? சரி! உங்கள் இஷ்டம் போலச் செய்யுங்கள்" என்ருன்.

அது கேட்டு மாணிக்கம் "யாரிடம் பேசுகிருய்? எனக்கு யாருமே தென்படவில்லையே" எனவே வேலனும் "என் மாமனுர்தான் வந்து என்னிடம் பேசிஞர். தன் மனைவி இவ்வளவு நாட்கள் இந்த உலகில் திரிந்தது போதும் என்றும் இன்றே அவளைச் சொர்க்க லோகத்திற்கு அழைத்துப் போவதாகவும் கூறி விட்டார். இனிமேல் மீனுட்சியின் மாமியார் இங்கு வரவும் மாட்டாள். அவளோடு பேசவும் மாட்டாள். அவளுக்கான உணவைச் சாப்பிடவும் மாட்டாள்" என்ருன்.

மறுநாள் வேலன் விடியும்போதே தன் ஊருக்குக் கிளம்பிவிட்டான். வாசல்வரைப் போய் அவனை வழி அனுப்பிவிட்டு வந்த மீனுட்சி தன் படுக்கையை எடுத்து வைக்கப் போர்வையை எடுத்து மடிக்கப் போன போது அதிலிருந்து ஒரு கடிதம் விழுந்ததைக் கண்டு அதை எடுத்துப் படித்தாள். அதில் பின்வருமாறு எழுதி இருந்தது.

"அருமை தங்கையே! நீ உன் கணவன் தன் தாய்மீது வைத்துள்ள பாசத்தையும் நம்பிக்கையையும் உன் சுயநலத்திற்காகப் பயன்படுத்தி வருகிருய். நீ நிறையச் சாப்பிட வேண்டுமானுல் வெட்கப்படாமல் உன் கணவன் முன்னே சாப்பிடலாமே

இதற்காக மாமியார் வந்து சாப்பிடு கிருர் என்று நாடகம் ஆடுவானேன்? நீ இஷ்டப்பட்ட பொருள்களையும் உன் மாமியார் விரும்புவதாகச் சொல்லித் தான் வாங்கிக் கொள் கிருய். இப்போது பட்டுப்புடவை அவசியமா? அதுவும் கடன் வாங்கித் தான் வாங்க வேண்டுமா? இந்த மாதிரி உன் ஆசைகளை நிறைவேற் றிக் கொள்ள வீண் செலவுகளைச் செய்து கொண்டே போனுல் உன் குடும்பம் என்ன ஆவது? என்னையே விரட்டவும் உன் மாமியார் நாடகத் தைப் பயன்படுத்தினுய். அதற்கு முடிவு கட்டவே நான் மாமனுர் பேசியதாக ஒரு நாடகம் ஆடினேன். இனிமேலாவது புத்திசாலித்தனமா கப் பிழை. பொங்கலுக்கு ஊருக்கு உன் கணவனையும் அழைத்துக் கொண்டு வா''

மீனுட்சிக்கு இக்கடிதத்தைப் படித்த பின்பே தன் பண்பற்ற நடத் தைபற்றிய உணர்வு வந்தது. தன் வீடு தேடி வந்த தன் அண்ணனை மரி யாதை செய்யாமல் அனுப்பி விட்ட தற்கு அவள் மனம் புழுங்கினுள். அந்தக் குறையை அவள் பொங்கல் பண்டிகையின் போது போக்கி விடத் தீர்மானித்தாள் அவள் தன் கணவனிடம் ''முதல் முறையாக நம் வீடு தேடி வந்த என் அண்ண னுக்கு எந்த மரியாதையும் செய் யாததோடு வந்த மறுநாளே திருப்பி அனுப்பிவிட்டேன். இதற்குப் பரி காரமாக நாம் ஏதாவது செய்ய வேண்டும்'' என்ருள்.

மாணிக்கமும் ''பொங்கல் பண்டிகை வரப்போகிறதே. அப் போது உன் ஊருக்குப்போய் உன் அண்ணனுக்கும் மற்றவர்களுக்கும் பரிசுகள் அளிக்கலாம்'' என் ருன். அதன்படியே அவள் தன் கணவனேடு அங்கு சென்றதோடு தன் அண்ணனின் குடும்பத்தினர் யாவருக்கும் பரிசுப் பொருள்களை வாங்கிச் சென்ருள். இப்போது அவள் திருந்திவிட்டாள்.



# யார் முட்டாள்?

ஒரு விறகு வெட்டி காட்டில் விறகு வெட்டிக் கொண்டிருந்தான். உச்சி வேளையின் போது அருகே இருந்த ஆற்றில் இறங்கி நீர் குடித்துவிட்டுத் திரும்பி வந்த போது அவன் ஆற்றுமணலில் ஏதோ ஒரு பொருள் பளபளவென மின்னுவதைக் கண்டு அதை எடுத்துப் பார்த்தான்.

அப்போது அவ்வழியே ஒரு வைர வியாபாரி வந்தான். அவன் விறகு வெட்டியின் கையி லிருப்பதைப் பார்த்துவிட்டு "என்னப்பா! கண்ணாடித்துண்டை வைத்துக் கொண்டு அப்படிப் பார்க்கிறாய்? நான் பத்து ரூபாய் கொடுக்கிறேன். எனக்குக் கொடுத்து விடு" என்றான்.

ஒரு கண்ணாடித்துண்டிற்கு ஒருவன் பத்து ரூபாய் கொடுக்க முன் வந்தால் அது மிகவும் விலையுள்ளதாகத்தான் இருக்கும் என ஊகித்து விறகு வெட்டி "இன்னும் அதிகவிலை கொடுத்தால் கொடுக்கிறேன்" என்றான். விறகு வெட்டி பதினைந்து இருபது என்று உயர்த்திக் கொண்டே போய் முடிவில் இருபத்தைந்து ரூபாய் கொடுப்பதாகக் கூறினான். விறகு வெட்டியோ இன்னும் அதிக விலை கேட்கவே வியாபாரியும் "இருபத்தைந்திற்கு மேல் இல்லை. நான் அடுத்த கிராமத்திற்குப் போய் விட்டு இன்னும் மூன்று மணிநேரத்திதுள் திரும்பி வருகிறேன். அதற்குள் ஒரு முடிவுக்கு வா" என்று கூறிவிட்டுப் போனான்.

அந்தக் காட்டில் யார் வந்து விறகு வெட்டியிடம் அந்த வைரத்தை வாங்கிவிடப் போகிறான் என்று நினைத்தே அந்த வைர வியாபாரி போய்விட்டு மூன்று மணிநேரம் கழித்து வந்து "என்ன முடிவு செய்தாய்?" என்று கேட்டான்.

விறகு வெட்டியும் "அதை வேறு ஒருவருக்கு நூறு ரூபாய்க்கு விற்று விட்டேனே" என்றான். அப்போது வைரவியாபாரி "அட முட்டாளே! அது பத்தாயிரம் ரூபாய் மதிப் புள்ள வைரம். இவ்வளவு குறைந்த விலைக்கு விற்று விட்டாயே" என்றான்.

விறகு வெட்டியும் "யார் முட்டாள்? வைரத்தின் உண்மை விலையை அறியவே அப்படி நான் சொன்னேன். நீ பத்தாயிரம் ரூபாய் கொடுப்பதானால் உனக்கு அதைக் கொடுக்கி றேன்" என்றான். வியாபாரி கல்லாய்ச் சமைந்துப் போனான்!





# விஜேதனின் விசித்திர யாத்திரைகள்

## 3

*[சதானந்த முனிவர் தம் தவ வலிமையால் அற்புத சக்தி கொண்ட விஜேதனை உருவாக்கினார். அவன் யானைகளின் உதவியோடு ஏழைகளின் குடிசைகள் தீக்கிரையாவதிலிருந்து காப்பாற்றினான். கொள்ளைக்காரர்கள் தம் தேவிக்கு பலியிடக் கவர்ந்து சென்ற சிறுவனை அவர்களிடமிருந்து காப்பாற்றி அவனது ஊர் வரை கொண்டு போய் விட்டான். அதன் பிறகு—]*

கொள்ளைக்காரர்கள் சிறுவன் சுகுமாரனைப் பலி இட்டுவிட்டார்கள் என அந்த கிராமத்தவர் எண்ணிக் கொண்டிருக்கையில் அவனே உயிருடன் திரும்பி வந்து கொண்டிருந்தது கண்டு அவர்கள் ஆச்சரியப் பட்டார்கள். அவனது தாயாரோ "ஆகா வந்து விட்டாயா மகனே" என்று கூறி அவனைக் கட்டித் தழுவிக் கொண்டாள்.

கிராம அதிகாரி "எப்படியப்பா நீ அந்தக் கொள்ளைக்காரர்களிடமிருந்து தப்பி வந்தாய்?" என்று கேட்டார்கள். இன்னொருவனோ "பயல் கெட்டிக்காரன். கொள்ளைக்காரர்களைச் சாமர்த்தியமாக ஏமாற்றி விட்டு வந்து விட்டானே" எனக் கூறினான். இன்னொருவனோ "நம் சுகுமாரனுக்குச் சொல்லியா கொடுக்க வேண்டும். அவன்தான் படுசுட்டி



அடக்க முடியவில்லையே'' என்றார் கிராம அதிகாரி.

அப்போது சுகுமாரன் ''எதற்கும் ஒரு முடிவு என்பது உண்டு. அவர்களது கொட்டம் விரைவிலேயே அடங்கப் போகிறது. அதற்கு மன்னரின் படை வீரர்கள் இப்போதே செயல்பட வேண்டும். அவர்கள் என்னுடன் வந்தால் நான் அந்தக் கொள்ளைக்காரர்களைப் பிடித்துத் தருகிறேன்'' என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். அப்பகுதியில் இருந்த படைத்தலைவன் அவனை ஏற இறங்கப் பார்த்தான். கிராம அதிகாரியோ ''சுகுமாரன் சொல்வது பற்றி யோசிக்க வேண்டும். உனக்கு அவர்களது மறைவிடம் தெரியுமா? நாம் இப்போது போனால் அவர்கள் நமக்குக் கிடைப்பார்களா?'' என்று கேட்டார்.

படைத் தலைவனும் ''ஒருவேளை அவர்கள் அங்கேயே இருந்தாலும் என் கீழ் உள்ள ஒரு சில வீரர்களைக் கொண்டு அவர்களைப் பிடிக்கவும் முடியாதே. இன்னும் நிறைய வீரர்கள் வேண்டுமே'' என்றான்.

சுகுமாரனும் ''இப்போது அந்தக் கொள்ளைக்காரர்கள் நினைவிழந்து செயலற்று விழுந்து கிடக்கிறார்கள். அந்த குகை உள்ள இடம் எனக்குத் தெரியும். நாம் விரைவில் சென்றால் அவர்களைப் பிடித்து விடலாம். அதற்குள் அவர்களது மயக்கம்

ஆயிற்றே'' என்று பாராட்டினான்.

அப்போது சுகுமாரன் பணிவுடன் வணங்கி ''நான் உயிருடன் தப்பி வந்தேன் என்றால் அதற்கு என் சாமார்த்தியம் காரணம் அல்ல. ஒரு தேவன்தான் என்னை வந்து காப்பாற்றினான். ஆனால் நான் ஒருவன் உயிர் தப்பி வந்ததால் என்ன பயன்? கொள்ளைக்காரர்கள் இது வரையில் எவ்வளவோ பேர்களைக் கொன்றார்கள். இனியும் கொல்லத் தானே போகிறார்கள்'' என்றான்.

''நீ சொல்வது என்னவோ சரி தான். ஆனால் அந்தப் பாவிகளிடமிருந்து நீ தப்பி வந்தாயே, அது போதும். அந்தக் கொள்ளைக்காரர்களை அடக்க நம்மால் முடியாது. மன்னரின் படைகளாலேகூட அவர்களை

போய் விடாது" என்றான்.

"அப்படியானால் இப்போதே கிளம்பலாம்" என்று உற்சாகத்தோடு கூறினான். கிராம அதிகாரி அவ்வூர் இளைஞர்களைக் கூட்டிக் கொண்டு கிளம்பினார். எல்லோரும் தடியும் கத்தியும் எடுத்துக் கொண்டு சென்றார்கள்.

சுகுமாரனின் தாயோ "மகனே! சாப்பிட்டு விட்டுப் போ" என அன்புடன் கூறினாள். அவனோ "இல்லை அம்மா. நான் இந்த வேலையை முடித்த பிறகு வருகிறேன். நீ கவலைப் படாதே" எனக் கூறிவிட்டு எல்லோரையும் அழைத்துக் கொண்டு கொள்ளைக்காரர்கள் வாழும் காட்டை நோக்கிச் சென்றான்.

காட்டிற்குள் கொஞ்ச தூரம் போனதும் சுகுமாரன் எல்லோரையும் ஓரிடத்தில் நிற்கச் சொல்லி விட்டு அங்கிருந்த ஒரு மேட்டின் மீது ஏறிப் பார்த்தான். அவன் சற்று தூரத்தில் கொள்ளைக்காரர்கள் இன்னமும் மயக்கம் தெளியாமல் விழுந்து கிடப்பதைக் கண்டான். அவன் படைத் தலைவனையும் கிராம அதிகாரியையும் அங்கு வரும்படி சைகை செய்தான்.

அவர்களும் அந்த மேட்டின் மீது ஏறிப் பார்த்து கொள்ளைக்காரர்கள் உணர்வு இல்லாமல் விழுந்து கிடப்பதைக் கண்டார்கள். உடனே படைத் தலைவன் தன் ஆட்களிடம் காட்டுக் கொடிகளை அறுத்துக்கொண்டு



வரும்படிக் கட்டளை இட்டான். அவர்களும் அவற்றை அறுத்து எடுத்து வந்தார்கள்.

எல்லோரும் கொள்ளைக்காரர்கள் கிடந்த இடத்தை அடைந்தார்கள். வீரர்கள் கொள்ளைக்காரர்களின் கைகளைக் கொடிகளால் இறுகக் கட்டிவிட்டார்கள். சற்று நேரம் கழிந்த பின்னரே கொள்ளைக்காரர்களுக்கு சுயநினைவு வந்தது.

கொள்ளைக்காரர் தலைவன் ஜக்கு தன் முன் படைத் தலைவனையும் வீரர்களையும் கண்டு திகைத்துப் போனான். படைத் தலைவனோ "அடே கயவர்களே! மரியாதையாக என்னோடு நடவுங்கள். இன்றோடு உங்கள் ஆட்டம் தீர்ந்தது. யாராவது திமிறினால் அவனைக் கல்லிலும் முள்ளி



லும் இழுத்துச் செல்வேன். தப்பி ஓட முயன்றால் அவன் தலை துண்டிக்கப்படும். ஜாக்கிரதை" என எச்சரித்தான்.

ஜக்கு சுற்றுமுற்றும் பார்த்து விட்டு எல்லோரும் வீரர்களிடம் அகப்பட்டு விட்டதை உணர்ந்தான். அவன் சட்டெனத் தன் கைகளை உயர்த்திக் கைகளில் கட்டப்பட்ட கொடிகளைக் கடித்து அறுக்க முயன்றான். உடனே படைத்தலைவன் தன் வாளை உருவி அவன் கழுத்தில் வைத்து "மறுபடியும் இப்படி ஏதாவது செய்ய முயன்றால் உன் தலை கழுத்தில் இராது" என்றான் கடுமையாக.

ஜக்கு என்ன செய்வான்? பேசாமல் படைத்தலைவன் சொல்கிறபடி நடக்க வேண்டியதாயிற்று. வீரர்கள் கொள்ளைக்காரர்களைச் சூழ்ந்து நின்றார்கள். கிராம அதிகாரியும் மற்றும் கிராம இளைஞர்களும் தடிகளுடன் நின்றார்கள். இதை எல்லாம் கண்டு கொள்ளைக்காரர்கள் தாம் எதுவும் செய்ய முடியாது என்பதை உணர்ந்து கொண்டார்கள்.

படைத்தலைவனும் சுகுமாரனும், கிராம அதிகாரியும் அக்கொள்ளைக்காரர்களை நடத்திக் கூட்டிக்கொண்டு தலைநகரை நோக்கிச் சென்றார்கள்.

வழிநெடுக மக்கள் நின்று. கொள்ளைக்காரர்கள் கட்டி இழுத்துச் செல்லப்படுவது கண்டு ஒரேயடியாக மகிழ்ந்தனர். ஒரு சிலர் அவர்கள் செய்த அக்கிரமங்களை எண்ணிப் பார்த்து அவர்களை அடிக்கவும் முயன்றனர். அப்போது சுகுமாரன் குறுக்கிட்டு "வேண்டாம். இவர்களை நாம் தண்டிக்கக் கூடாது. இவர்களைப் பிடித்தாகி விட்டது. நாம் மன்னரிடம் இவர்களை ஒப்படைத்து விடுவோம். இவர்களை தண்டிப்பது அவருடைய பொறுப்பு" என்று கூறித் தடுத்தான்.

மக்கள் சுகுமாரனையும் படைத்தலைவனையும் வாழ்த்தினார்கள். குறிப்பாக சுகுமாரனை கௌரவித்தார்கள். அவர்களுக்கு விருந்தும் அளித்தார்கள். கொள்ளைக்காரர்களை ஒரு மரத்தடியே நிறுத்தி விட்டு சுகுமாரனும் படைத் தலை

வனும் மக்கள் அளித்த விருந்தில் கலந்து கொண்டார்கள். அப்போது அவன் தன்னிடம் யாரோ இரகசிய மாக ஏதோ கூறுவதைக் கேட்டான்.

அக்குரல் அவனை ஒரு புதரின் பக்கம் வரச் சொல்லியது. சுகு மாரன் அங்கு செல்லவே விநோ தன் அங்கே நிற்பதை அவன் கண் டான். அவன் சுகுமாரனிடம் "நான் இங்கே இருப்பதை யாருக்கும் தெரியப்படுத்த வேண்டாம். இந் தக் கொள்ளைக்காரர்களை நீ பிடித்த விதம் பாராட்டத்தக்கதே. இவர் கள் கொடியவர்களானாலும் இவர் களும் நம்மைப்போல மனிதர்கள் தானே. இவர்களுக்குப் பசி, தாகம் என்றெல்லாம் இருக்கும் அல்லவா? இவர்களுக்கும் உணவு அளிக்க ஏற்பாடுசெய்" என்றான்.

சுகுமாரனும் அவ்வாறே செய்வ தாகக் கூறி அவனது கால்களில் விழப் போகவே விநோதன் அவனைத் தடுத்து "வேண்டாம். நான் உன்னை விட உயர்ந்தவன் அல்ல. நான் உன் நண்பன்" என்று கூறிவிட்டு மறைந்தான்.

சுகுமாரன் விநோதன் கூறிய படியே கொள்ளைக்காரர்களுக்கும் உணவு கொடுக்கும்படி கிராம அதி காரியிடமும் படைத்தலைவனிட மும் கூறினான். முதலில் அவர்கள் "இந்தப் பாவிகளுக்காக உணவு? எவ்வளவு குடும்பங்களைப் பட்டி னிப் போட்டு இவர்கள் சாகடித் தார்கள்? இவர்களுக்கா இரக்கம் காட்டுவது?" என்றார்கள்.



அதனால் சுகுமாரனே "இவர் கள் என்னதான் கொடிய செயல் களைச் செய்திருந்தாலும் இவர் களும் மனிதர்களே" எனக்கூறி பல வாறு வேண்டி அக்கொள்ளைக்கார் களுக்கும் உணவு கிடைக்கச் செய் தான். அதன்பின் யாவரும் தலை நகருக்குக் கிளம்பினார்கள்.

தலைநகருக்குக் கொண்டு செல் லப்பட்ட கொள்ளைக்காரர்கள் மன் னன் முன் நிறுத்தப்பட்டார்கள். மன்னன் அவர்களுக்கு மரணதண் டனை விதித்தான். அவர்களை வீரர் கள் இழுத்துப் போய் சிறைச்சாலை யில் அடைத்து வைத்தனர். அப் போது கொள்ளைக்காரர்களுக்



கிடையே தகராறு ஏற்பட்டது. ஒரு வன் கொள்ளைக்காரத் தலைவனைப் பார்த்து "ஏய் ஜக்கு! உன்னால்தான் எங்களுக்கு இப்படி ஒரு நிலை ஏற்பட்டுள்ளது" என்றான்.

அதைக்கேட்ட ஜக்கு "என்னடா மரியாதை குறைகிறது? என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிடும் அளவுக்கு உனக்குத் துணிச்சல் வந்து விட்டதா? உன்னை கொன்று குழி தோண்டிப் புதைத்து விடுவேன்" என்றான் கோபத்தோடு. அந்தக் கொள்ளைக்காரனோ "போடா போ! நான் இப்போது போனால் நீ நாளை போகப் போகிறாய். வீணாகத் துள்ளாதே" என்றான் அலட்சியமாக.

அப்போது ஒரு குரல் "நீங்கள் மரண தண்டனை அடையாமல் உயிர் வாழ நினைக்கிறீர்களா?" என்று கேட்டது. எல்லோரும் அந்தக் குரல் ஒலித்த திசையில் பார்த்தனர். ஜக்குவும் "யார் இப்படிப் பேசுவது?" என்று கேட்டான். அக்குரலும் "நான்தான் உங்களை எல்லாம் பிடித்துக் கொடுத்தவன்" என்றது.

ஜக்குவும் "நீ எங்களைப் பிடித்துக் கொடுத்தவன் என்றால் இப்போது எங்களைக் காப்பாற்ற ஏன் முயல்கிறாய்?" என்று கேட்டான். அக்குரலும் "குற்றவாளிகள் இறப்பதில் எனக்கு விருப்பம் இல்லை. அவர்கள் மனம்மாறித் திருந்தி விட்டால் அதைக் கண்டு மகிழ்பவன் நான். பிறரைத் துன்புறுத்துவதால் நீங்கள் உங்கள் வாழ்வையே பாழாக்கிக் கொள்கிறீர்கள். நீங்கள் இதுவரை பிறருக்குத் துன்பம் கொடுத்து வந்ததால் உங்களை வீரர்களிடம் பிடித்துக் கொடுத்தேன். இனியாவது நீங்கள் இப்படிப்பட்ட இழிதொழில்கள் செய்வதில்லை என்று சபதம் செய்து நல்ல வழியில் செல்வதாக உறுதி கூறினால் நான் இதுபற்றி மன்னரிடம் எடுத்துக்கூறி உங்களுக்கு மரண தண்டனை கிடைக்காமலும் மன்னிப்புக் கிடைக்கவும் வழி செய்கிறேன்" என்றது. அக்குரல் வேறு யாருடையதும் அல்ல. வினோதனுடையதே.

கொள்ளைக்காரர்கள் சற்று

நேரம் யோசித்தார்கள். பிறகு எல்லோரும் "நீ சொல்கிறபடியே சபதம் செய்கிறோம். இனியும் இம் மாதிரி கொள்ளை கொலைகளில் இறங்காமல் நல்லவழியே நடக்கிறோம். எங்களுக்கு இந்த மரண தண்டனை கிடைக்காமல் செய்." என்றார்கள். ஜக்குவும் "ஆமாம். இனி நாங்கள் எல்லோருமே திருந்தி விடுவோம். ஒரு காலத்தில் நானும் அமைதியான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தவனே. ஆனால் விதி என்னை இக்கொடிய செயல்களைச் செய்ய இழுத்துச் சென்றது. எங்களை மட்டும் நீ இப்போது காப்பாற்றிவிட்டால் வாழ்நாள் முழுவதும் உனக்கு அடிமை போல உழைக்க நாங்கள் தயார்" என்றான்.

வினோதனும் "வேண்டாம். எனக்கு அடிமையாக வேண்டாம். நீங்கள் நல்ல காரியங்களைச் செய்தால் அதுவே உங்களுக்கு நீங்கள் செய்து கொள்ளும் நற்பணியாகும். இதனால் எங்கும் அமைதியும் சுக வாழ்வும் யாவருக்கும் கிடைக்கும்" என்றான். அப்போது ஜக்கு "எனக்கு மரண தண்டனை கிடைத்து இவர்கள் எல்லோரும் விடுதலை அடைந்தாலும் நான் மிகக் மகிழ்ச்சி அடைவேன். ஏனெனில் இவர்களை இவ்வழியில் இழுத்துச் சென்றவன் நான்தானே" என்றான் தலைகுனிந்தவாறே.

வினோதனும் "நீங்கள் யாவரும்



மாறிவிட்டதாகக் கூறி மன்னர் உங்களை மன்னிக்கும்படிச் செய்கிறேன்" எனக்கூறி விட்டு சுகுமாரனைக் காணச் சென்றான். வினோதன் கூறியதை எல்லாம் சுகுமாரன் கவனமாகக் கேட்டுவிட்டு அதன் படியே நடப்பதாகக் கூறி மன்னனை பேட்டி கண்டான். அவன் மன்னனிடம் கொள்ளைக்காரர்கள் மனம் மாறியதைக் கூறி அவர்களை மன்னித்து விட்டு விடும்படி வேண்டினான்.

மன்னனோ பலமாகச் சிரித்து "உனக்கு இந்த யோசனை எப்படி வந்தது? என்று கேட்டான். சுகுமாரனும் "என் தேவன் இட்ட கட்டளை இது. கொள்ளைக்காரர்கள் மனம் மாறியதும் அவன் செயலே. அவர்

கள் நல்வழியில் செல்வதாகக் கூறுவதும் அவன் செயலே'' என்றான்.

மன்னனும் ''ஓகோ! இதெல்லாம் அவன் செயல் என்றால் அவர்களை விடுவிக்கவும் அவன் ஏதாவது ஒரு அற்புதச் செயலைப் புரியட்டும். நான் என் தீர்ப்பை மாற்றப் போவதில்லை. அவர்களுக்கு நான் விதித்த தண்டனையை மாற்றப் போவதில்லை'' என்றான்.

சுகுமாரன் மன்னன் கூறியதைக் கேட்டுத் திகைத்துப்போனான். ஏனென்றால் திருடர்கள் திருந்தி நல்வழிப்படுவதாக அவர்களே உறுதி அளித்தால் மன்னன் மகிழ்ந்து போய் அவர்களைவிட்டுவிடுவான் என எதிர்பார்த்தான். ஆனால் மன்னன் ஒரேயடியாக முடியாது எனக் கூறவே அவன் சற்று யோசித்தான்.

அவன் மீண்டும் மன்னனிடம் ''அரசே! அவர்கள் இனியும் கொள்ளை கொலைகளைச் செய்வதில்லை என்றும் நேர்வழியில் செல்வதாகவும் உறுதி கூறுகிறார்களே. தாங்கள் அவர்களை மன்னிக்கக் கூடாதா?'' என்று கெஞ்சினான்.

மன்னனோ ''நீ ஏதோ தெய்வம், செயல் என்றெல்லாம் சொன்னாயே. அதுதான் அவர்களைக் காப்பாற்ற வேண்டும் என்றால் அவர்களைவிட்டுவிட முடியாது. அவர்களுக்கு கொடுத்த தண்டனை நிறைவேற்றத்தான்படும்'' என்றான்.

சுகுமாரன் அதுகேட்டு மனம் ஒடிந்து அவன் வினோதனிடம் சென்றான். மன்னன் கூறியதை சுகுமாரனும் கூறவே வினோதனும் ''அப்படியா மன்னன் கூறினான்? சரி. ஒரு அற்புதத்தையும் செய்து காட்டி அவர்களை விடுவிக்கலாம்'' என்றான்.

(தொடரும்)





# பதவி உயர்வு

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழத்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ உன் திறமையைக் காட்டி இப்பணியில் முழு மூச்சுடன் ஈடுபட்டிருப்பதாகத் தெரிகிறது... சில சமயங்களில் திறமைசாலிகள் மதிக்கப் படாததோடு அவமானப் படுத்தவும் படுகிறார்கள். இதனை விளக்க கோவிந்தவர்மன் என்ற ஒற்றர் தலைவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக்கேள்" என்று கூறி கதையை ஆரம்பித்தது.

சூரபுர நாட்டின் மன்னன் சூரசேனன் மிகவும் கொடியவன் தன் நாட்டை விஸ்தரிக்க வேண்டும்

## வேதாளம் சொல்லும் கதை



என்று ஆசை கொண்டவன். அவனுக்குத் தன் அண்டை நாடான சொர்ணகிரியின் மீது ஒரு கண் இருந்தது. ஆனால் அந்த நாட்டைப் போரில் வெல்லும் அளவிற்கு அவனிடம் படைபலம் இல்லை. எனவே அதற்கு என்னவழி என்று யோசிக்கலானான்.

அப்போது சொர்ணகிரி மன்னனின் மகள் ஒரு காட்டில் தன் தோழிகளோடு உல்லாசமாகப் பொழுது போக்கப் போய் கொண்டிருக்கிறாள் என்பது சூரசேனனுக்குத் தெரிந்தது. அவன் தன் வீரர்களை அந்தக் காட்டிற்கு அனுப்பி அவளைச் சிறைப் பிடித்துத் தன் நாட்டிற்குக் கொண்டு வந்து விட்டான்.

அதன்பின் அவன் சொர்ணகிரி மன்னனுக்கு ஒரு கடிதம் எழுதித் தன் தூதன் வாயிலாக அனுப்பினான் அதில் "உன் மகளை நான் பிடித்து வைத்திருக்கிறேன். அவளை நீ மீட்டுக் கொள்ள வேண்டும் என்றால் நீ பணயப்பணம் ஐந்து லட்சம் வராகன் கொடுக்க வேண்டும். நீ மட்டும் என் நாட்டின் மீது படை எடுத்து உன் மகளை மீட்க முயன்றால் நீ அவளை உயிருடன் காண முடியாது. அவளது பிணத்தைத்தான் எடுத்துப் போக வேண்டி வரும் உன் பதிலைச் சொல்லி அனுப்பு" என்று இருந்தது.

தூதனிடமிருந்து அக்கடிதத்தை வாங்கிக் படித்த கிழமந்திரி கிருஷ்ண சர்மா மன்னனிடம் அந்த விஷயத்தைக் கூறிவிட்டு தூதனிடம் "உன் அரசனிடம் இன்னும் ஒரு மாத காலத்தில் அவர்கேட்ட தொகையை அனுப்புவதாகச் சொல்" என்று கூறி அனுப்பினார். தூதன் போனதும் சொர்ணகிரி மன்னன் "என் மகளை விட்டு விடுவான் என்பது என்ன நிச்சயம்?" என்று கேட்டான்.

கிருஷ்ண சர்மாவும் "நாம் அவனுக்கு ஒரு செல்லாத காசு கூடக் கொடுக்கப் போவதில்லை. இந்த ஒரு மாதத்துள் நம் அரசகுமாரியை விடுவிக்க வேண்டும். அதற்காகத் தான் அப்படி பதில் சொல்ல அனுப்பினேன்" என்றார். பிறகு அவர் "நமக்கு விசுவாசமாகப் பணி

புரியும் ஒற்றர்தலைவன் கோவிந்த வர்மனை அனுப்பி அரசகுமாரி எங்கு சிறை வைக்கப்பட்டிருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்ள லாம்'' என்றார்.

மன்னனும் கோவிந்தவர்மனிடம் அப்பணியை ஒப்படைக்கவே அவன் மீனவன் வேடத்தில் சூரபுர எல்லையை அடைந்தான். அங்கு சூரசேனனின் படைகள் நதிக்கரை யில் முகாம் இட்டிருந்தன. மீனவன் வேடத்தில் கோவிந்தவர்மன் அந்த வீரர்களின் கட்டுப்பாடுகளைக் கடந்து தலை நகரை அடைந்தான். சூரபுரி யில் நான்கு நாட்கள் அலைந்து திரிந்து சொர்ணகிரி அரசகுமாரி அங்கு இல்லை என்றும் அங்கிருந்து சற்று தூரத்திலுள்ள ஒரு பாழ டைந்த கோட்டைக்குள் வைக்கப் பட்டிருக்கிறாள் என்றும் அவன் தெரிந்து கொண்டான்.

அவன் உடனே அங்கிருந்து புறப்பட்டு இரவுவேளையில் அந்தப் பாழடைந்த கோட்டையை அடைந் தான். அவன் அக்கோட்டைக்கு வெளியே ஒரு மறைவான இடத் தில் நின்று அக்கோட்டையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அப் போது யாரோ ஒருவன் பலமாக அவனது தலைமீது அடித்தான் கோவிந்தவர்மன் கோபத்தோடு வாளை உருவிக் கொண்டு திரும்பிப் பார்த்தான். அங்கே காவல் வீரன் ஒருவன் தீவட்டியுடன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து சட் டெனத்தன் வாளால் அவனைக் குத்திக் கொன்றான்.

அந்த வீரன் ஓவெனக் கத்திக்





கொண்டே விழுந்ததால் சற்று தூரத்தில் காவல் புரிந்து கொண்டிருந்த வீரர்கள் அந்த இடத்திற்கு ஓடி வந்தார்கள். அதைக்கண்ட கோவிந்தவர்மன் கீழே விழுந்து கிடந்த வீரனின் தீவட்டியை எடுத்து அங்கே உலர்ந்து கிடந்த சருகு, இலை, குச்சிகளில் நெருப்பை வைத்தான். காற்று வேகத்தில் நெருப்பு வேகமாகப் பரவவே வீரர்கள் கூச்சலிட்டுக் கொண்டு பயந்து ஓடினார்கள். கோவிந்தவர்மன். அந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அங்கிருந்து தப்பி சொர்ணகிரியின் தலைநகரை அடைந்தான்.

காயமுற்ற அவன் சொர்ணகிரி மன்னனைக் கண்டு அரசகுமாரி சிறை வைக்கப்பட்டிருக்கும் கோட்டையைக் கூறி தான் அங்கிருந்து தப்பிவந்த விதத்தையும் விவரித்தான். மன்னனும் மந்திரியும் அதனைக் கேட்டுப் பேசாமல் இருந்தனர்.

மறுநாள் காந்தசேனன் என்ற ஒற்றன் மன்னனைக்கண்டு தான் போய் அரசகுமாரியை மீட்டு வருவதாகக் கூறினான். மன்னனோ "உன்னால் முடியுமா? எதற்கும் கோவிந்தவர்மனைக் கேட்டு அந்தக் கோட்டைக்குப் போ" என்றான்.

காந்தசேனனோ "அரசே! கோவிந்தவர்மனை நான் சந்திக்க வேண்டியதில்லை. ஏனெனில் அவன் அளிக்கும் தகவல் சற்றும் பயன்படாது. ஏனெனில் சூரசேன மன்னன் இதற்குள் கோட்டைக்குள் அடைத்து வைத்திருந்த அரசகுமாரியை வேறு எங்காவது கொண்டு போய்ச் சிறை வைத்திருப்பான்" என்றான்.

அதைக் கேட்ட மன்னனும் கிழ மந்திரியும் அவனது புத்திசாலித்தனத்தை கண்டு வியந்தார்கள். மன்னனும் "சரி, நீ முயன்று பார்" என்று கூறி அனுப்பினான்.

நாலைந்து நாட்களுக்குப்பின் காந்தசேனன் திரும்பிவந்தான். அவன் மன்னனிடம் "அரசே! இந்த வேலையை என் ஒருவனால் மட்டும் செய்து விடமுடியாது. ஏனெனில் இப்போது சூரசேனன் அரசகுமாரியை ஒரு தீவில் சிறைவைத்திருக்கிறான். நான் மட்டும் தனியாக அத்தீவிற்குள் சென்றால் என்னை அங்கு

காவல்புரியும் வீரர்கள் எளிதில் பிடித்துக் கொண்டுவிடுவார்கள். அதனுல் பயனில்லையே. உங்களுக்கு இதனைத் தெரிவிப்பதே நல்லது'' எனக்கூறி அத்தீவு இருக்கும் இடத்தைக் கூறினுன்.

மன்னனும் ''சரி போ. உன்னுல் இந்த வேலையைச் செய்ய முடியவில்லை'' என்று கூறி அவனை அனுப்பி விட்டான். கிழமந்திரியோ உடனே சேனுதிபதியை வரவழைத்து அவனிடம் அத்தீவுபற்றிக் கூறி ''அங்குதான் அரசகுமாரி சிறை வைக்கப்பட்டிருக்கிருள். அவளை விடுவிக்கத் திட்டம் வகுக்க வேண்டும்'' என்ருர்

சேனுதிபதியும் ''சூர சேனனுக்குச் சந்தேகம் ஏற்படாதபடி நம் வீரர்கள் நூறு பேருக்கு மீனவர்கள் போலவேடம் போட்டு அத்தீவிற்கு அனுப்புவோம். அவர்கள் நீந்தி அத்தீவை அடைந்து அங்குள்ள வீரர்களுடன் எதிர்த்துப் போராடி அரசகுமாரியை மீட்டு வந்துவிடலாம்'' என்ருன்.

சொர்ணபுரி மன்னன் அவ்வாறே செய்யச் சொல்லிவீர்களை மீனவர் வேடத்தில் அனுப்பினுன். அதே சமயம் சூரபுரியின் மீது படை எடுத்துச் சென்று சூரசேனனைச் சிறைபிடித்து சூரபுரியையும் தன் வசப்படுத்திக் கொண்டான்.

வெற்றிபெற்ற சொர்ணகிரி மன்னன் தன்கிழமந்திரியிடம் ''இந்த



சந்தர்ப்பத்தில் நாம் நம் ஒற்றர் தலைவன் கோவிந்தவர்மனை கௌரவித்தால் நன்ருக இருக்கும் அல்லவா?'' என்று கேட்டான். அவரோ ''அரசே! கௌரவிக்கப்பட வேண்டியவன் கோவிந்தவர்மன் அல்ல. காந்தசேனன்தான்'' என்ருன்.

மன்னனும் சற்று யோசித்துவிட்டு ''நீங்கள் கூறியது முற்றிலும் சரியே'' எனக்கூறி கரந்த சேனனை கௌரவித்ததோடு அவனை ஒற்றர் தலைவனுக நியமித்தான். கோவிந்தவர்மனைப்பதவி நீக்கம் செய்தான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''மன்னனே! திறமைசாலியான ஒற்றர் தலைவன் கோவிந்தவர்மனைப் பாராட்ட வேண்டாம் எனக்கிழமந்திரி கூறியதை சொர்ண

கிரிமன்னன் ஏன் ஏற்ருன்? அது மட்டுமல்ல, அவனைப் பதவிநீக்கம் செய்தானே, அதுசரியா? காந்தசேனனைப் பாராட்டிப் பதவி அளித்தது எப்படி நியாயமாகும்? இந்தச் சந்தேகங்களுக்கு நீ தக்க விடைகளைத் தெரிந்திருந்தும் கூருவிட்டால் உன் தலைவெடித்து சுக்குநூருகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''கோவிந்த வர்மன் திறமைசாலியான போதிலும் கோபப்பட்டு விளைவுகளைப்பற்றி சற்றும் யோசிக்காமல் செயல் படுபவன். கோபம் அறிவை அழித்து விடும். தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அரசகுமாரி கோட்டைக்குள் இருக்கிருளே என்பதைக் கூட நினைத்துப் பாராமல் கோட்டையைச் சுற்றி தீமூட்டி விட்டு ஓடிவிட்டான். தீ கோட்டைக்குள் பரவி அரசகுமாரிக்கு ஆபத்தை விளைவித்திருக்குமேயாகில் பிரச்னைகள் பல உருவாகி இருக்கும். யாரோ வந்தான் என்று ஊகித்ததோடு சூரசேனன் அரசகுமாரியை அக்கோட்டையிலிருந்து தீவிற்கு மாற்றினுன். இதை ஊகித்தவன் காந்தசேனன். அவன் அரசகுமாரி எங்கே இருக்கிருள் என்பதைத் தெரிந்து கொண்டு வந்தான். அதனுல்தான் திட்டம் போட்டு அரசகுமாரியை மீட்கவும் சூரசேனனை சிறைப்பிடிக்கவும் முடிந்தது. கிழமந்திரி இதனை எல்லாம் நன்கு யோசித்தே கோவிந்தவர்மனை கௌரவிக்காமல் காந்தவர்மனை கௌரவிக்க வேண்டும் எனக்கூறியதைக் கேட்ட மன்னன் சற்று யோசித்து அதற்குத் தகுதி பெற்றவன் காந்தசேனனே என்பதை ஏற்ருன். கிழ அமைச்சர் கூற மன்னன் அதனை ஏற்றதும் சரியே'' என்ருன்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தின்மீது ஏறிக் கொண்டது.





# தலையை ஆட்டு!

ஒரு மன்னனுக்கு விசிறி என்ருல் மிகவும் பிடிக்கும். அதனுல் அவன் ஆயிரக்கணக்கில் விதவிதமான விசிறிகளைச் சேர்த்து வைத்திருந் தான்.

ஒருநாள் தெருவில் ஒருவன் "விசிறி வாங்கலேயோ விசிறி! அற் புத விசிறி!! அழகு விசிறி. மலி வான விலை. ஐம்பதே பொற்காசு கள்தான்" என்று கூவிக்கொண்டே போய்க் கொண்டிருந்தான். மன் னன் அவனை அழைத்து "எங்கே உன் விசிறியைக் காட்டு! அதில் அப்படி என்ன விசேஷம் இருக் கிறது பார்ப்போம்" என்ருன்.

விசிறி வியாபாரியும் ஒரு விசி றியை எடுத்துக் கொடுத்து "இது தான் அந்த அற்புத விசிறி" என் ருன். மன்னனும் அதை வாங்கிப் பார்த்து "இது எல்லா விசிறி களைப் போலத்தானே இருக்கிறது. இதில் ஒரு சிறப்பும் இருப்பதாகத் தெரியவில்லையே" என்ருன்.

வியாபாரியும் "இதை வாங்கி உபயோகித்துப் பார்த்தாலே இதன் சிறப்பு என்ன என்பது தெரியும். பார்க்கப் போனுல் இதனை நான் ஆயிரம் பொற்காசுகளுக்கு விற்க வேண்டும். ஐம்பது பொற்காசு களுக்கு விற்கிறேன் என்ருல் அது மிகவும் மலிவுதானே" என்ருன்.

மன்னனும் "சரி. ஒன்றைக் கொடுத்து விட்டுப் போ இது எப் படிப்பட்டது என்று பார்க்கிறேன்" என்ருன்.

வியாபாரியும் "நான் ஒன்றும் மோசக்காரன் அல்ல. நீங்கள் இதை உபயோகித்துப் பாருங்கள். நான் ஒரு மாதம் கழித்து வந்து பார்க் கிறேன். ஆனுல் இதை உபயோகிக் கும் விதத்தைக் கூறுகிறேன்" என் ருன்.

—வி. லாவண்யா—

மன்னனும் "நிறுத்து. ஒரு விசிறியை எப்படி உபயோகிக்க வேண்டும் என்று நீ ஒன்றும் சொல்லிக் கொடுக்க வேண்டாம். எல்லாம் எனக்குத் தெரியும்" என்று கூறி விசிறியை வாங்கிக் கொண்டு ஐம்பது பொற்காசுகளைக் கொடுத்து வியாபாரியை அனுப்பி விட்டான்.

அந்த விசிறி வாங்கிய மூன்றுவது நாளே அதன் காம்பு தனியாக வந்து விட்டது. அதன் ஓலைகள் அடுத்தடுத்து விழலாயின. விசிறி வியாபாரி ஏமாற்றி விட்டான்., அவன் எங்கே ஒரு மாதம் கழித்து வரப் போகிறான் என எண்ணிக் கோபமும் ஆத்திரமும் கொண்டான்.

ஆனால் அவன் நினைத்தது போல அல்லாமல் ஒரு மாதம் கழித்து விசிறி வியாபாரி வந்து மன்னனைப் பார்த்தான். மன்னனும் "ஓட்டை விசிறியைக் கொடுத்து ஏமாற்றி விட்டாயே? நீயே பார்" எனக் கூறி விசிறிக் காம்பையும் உதிர்ந்த ஓலைகளையும் காட்டினான்.

விசிறி வியாபாரியும் "குறை விசிறியில் இல்லை. உங்களிடம் தான். நீங்கள் இதை உபயோகிக்க வேண்டிய விதத்தில் உபயோகிக்க வில்லை." என்றான். மன்னனும் "என்ன உளறுகிறாய்? எனக்கா விசிறி வீசிக் கொள்ளத் தெரியாது?" என்று கோபத்தோடு கேட்டான். விசிறி வியாபாரியும் "இல்லை அரசே. இது அற்புத விசிறி. அதனால் எல்லா விசிறிகளைக் கையில் பிடித்து ஆட்டுவது போல அல்லாமல் இதனை நீங்கள் கையில் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இதன் முன் உங்கள் தலையை ஆட்ட வேண்டும்" என்றான்.

அதைக்கேட்ட மன்னனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவனும் "பேஷ் சாமர்த்தியமாகப் பேசுகிறாயே. இன்று முதல் நீ என் விசிறிகளின் பராமரிப்பு அதிகாரி" என அவனுக்குப் பதவியை அளித்தான்!



# மகான்கள் கனவு கண்ட பாரத நாடு

## சமர்ப்பண உணர்ச்சி

நம்நாட்டின் விடுதலைப் போரை நடத்தப் பல துறைகளிலிருந்தும் பிரமுகர்கள் தலைமை தாங்கி இருக்கிருர்கள். மக்களின் பேரபிமானத்தைப் பெற்ற இவர்களில் பிரபல கவியரசி சரோஜினி நாயுடு அம்மையாரும் ஒருவர்.

கவிக்குயில் சரோஜினியின் தந்தையார் அகோரநாத சட்டோபாத்தியாயர். இவர் ஹைதராபாத் நிஜாம் கல்லூரித் தலைவராகப் பணிபுரிந்து வந்தார். 1879ல் ஹைதராபாதில் பிறந்த சரோஜினி தேவியார் சிறு வயதிலிருந்தே முற்போக்கான எண்ணங்களைக் கொண்டிருந்தார். அதனுல் அவர் அந்தக் காலத்திலேயே கலப்பு மணமாக டர்கடர் கோவிந்தராஜுலு நாயுடுவை மணந்து கொண்டார். 1925ல் சரோஜினி தேவியார் இந்திய தேசிய காங்கிரஸ் சபையின் தலைவரானுர்.

அவர்தாம் சென்ற இடங்களில் எல்லாம் பழங்கால பாரதத்தின் பெருமையை விளக்கிச் சொற்பொழிவுகள் ஆற்றி மக்களிடையே புதிய உணர்ச்சியையும் எழுச்சியையும் ஏற்படுத்தலானுர். அவர் தமது அரசியல் வாழ்க்கையை ஆரம்பித்ததும் மக்களை இவ்வாறு உறுதி எடுக்கச் செய்தார். "மலைகள், நட்சத்திரங்கள் சாட்சியாக நாம் எல்லோரும் கட்டுப்பாட்டுடன் ஒன்ருக இருந்து முன் செல்வோம். நம் எண்ணங்களையும், பேச்சுகளையும், சக்தியையும் நாம் நம் தாய்நாட்டின் நலனுக்காக அர்ப்பணம் செய்வோம்."

## உங்களுக்குத் தெரியுமா?

1. ஆண் குழந்தை பிறந்ததுமே அதனை வேடனுகவும் போர் வீரனுகவும் ஆக்கும் சம்பிரதாயம் நம் நாட்டில் எங்கு உள்ளது?
2. உலகிலேயே மிக உயரமான நீர்வீழ்ச்சி எது?
3. வெனிஸ் நகரத்து கோண்டோலா போன்ற நீளமான படகுகள் நம் நாட்டில் எங்கு உபயோகிக்கப்படுகின்றன?
4. சிரவண பௌகொலாவிலுள்ள கோமடீஸ்வர சிலைக்கும், குதுப்மினுருக் கும் உயரத்திலுள்ள ஒரு அற்புதம் என்ன?

(விடைகள் 36ம் பக்கத்தில்)



# மகாலட்சுமி

தேவர்களும் அசுரர்களும் அமிர்தத்தை அடைய மந்தரமலையை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பைக் கயிருகவும் பயன்படுத்திப் பாற்கடலைக் கடைந்தார்கள். ஆனுல் அதிலிருந்து முதனில் வெளிவந்தது ஆலகால விஷம். அடுத்து பல பொருள்களோடு மகாலட்சுமியும் வெளிவந்தாள். இதன்பிறகே அமிர்தம் வந்தது.

பாற்கடலின் மன்னனின் மகளான லட்சுமி தேவியை எல்லாவித ஐசுவரியங்களை அளிக்கும் கடவுளாக எண்ணி மக்கள் வழிபட்டு வருகிருர்கள். தனம், தானியம், தைரியம், ஞானம், சாந்தி, சௌபாக்கியம், சந்தானம் ஆகியவற்றை எல்லாம் லட்சுமி தேவி அருள்வாள் என்று அந்தந்தப்

பெயர்களில் வணங்குகிறார்கள்.

மகாவிஷ்ணுவின் மனைவி லட்சுமி திருமகளின் கணவரான அவரை இதனால் திருமால் எனவும் அழைக்கிறோம். வைகுண்டத்தில் சொர்க்க லட்சுமியாயும் இல்லங்களில் கிருக லட்சுமியாயும் விவசாயிகளுக்கு தானிய லட்சுமியாயும் வீரர்களுக்கு விஜயலட்சுமியாகவும் வழிபடும் தெய்வமாக மகாலட்சுமியைக் கருதுகிறார்கள். தாமரை மலர் லட்சுமிக்கு மிகவும் பிடித்தமான மலர்.

# அம்புலிமாமா செய்திகள்

## சிறுமிகளின் சிறப்பு

அண்மையில் பத்தாவது படிவத் தேர்வு எழுதிய இரு சிறுமிகள் பலரது கவனத்தைக் கவர்ந்தனர். எட்டு வருடமும் ஏழு மாதமுமே நிரம்பிய மௌசமிசாட்டர்ஜி என்ற சிறுமி பத்தாம் வகுப்புத் தேர்வை எழுதித் தன் அறிவின் திறமையை வெளிப்படுத்தினாள். மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த சுவீதா சாருசாவந்த் என்ற சிறுமியின் இருகைகளிலும் விரல்கள் இல்லை. அவள் தன் கால் விரல்களால் தேர்வு எழுதினாள். எல்லோரையும்விட அவளுக்கு அரைமணி நேரம் அதிகமாகக் கொடுக்கப்பட்ட போதிலும் அவள் குறித்த மூன்று மணி நேரத்திற்குள்ளேயே தேர்வை எழுதி முடித்தாள்.





## நம்பவில்லை

அமெரிக்காவில் பார்கிராஸ்ட் ஆரம்பப் பள்ளி மாணவன் ஆண்டனி ஆண்டர்சன். ஒருநாள் அமெரிக்க ஜனாதிபதி ஜார்ஜ்புஷ் அப்பள்ளிக்கு விஜயம் செய்தபோது எட்டு வயதான அச்சிறுவன் அவர்தாம் தன் நாட்டின் ஜனாதிபதி என்பதை நம்ப மறுத்தான். புஷ் தன் கப்பல் போன்ற காரையும் தன் ஓட்டுனர் லைசென்ஸையும் அச்சிறுவனுக்குக் காட்டிய போதிலும் அச்சிறுவன் "இவை போதாது. இன்னும் குறிப்பிடத் தக்க அத்தாட்சி இருந்தாலே நம்புவேன்" என்றானாம்.

# இலக்கிய உலகம்

1. பாஸ்கரர் எழுதிய தம் ஒரு நூலின் முதல் அத்தியாயத்திற்குத் தன் மகளின் பெயரை வைத்தார். அந்தப் பெயர் என்ன? அந்த நூல் எது?
2. இலக்கியத்திற்கான நோபல் பரிசைப் பெற்ற முதலாவது ரஷ்ய எழுத்தாளர் யார்?
3. சர். சி. வி. ராமன் ஒரு நூலை எழுத மலர்களின் நிறங்கள் அடிப்படையாக இருந்தன. அந்த நூல் எது?
4. 'தி லாஸ்ட் மேன் இன் யூரப்' என்ற நூல் முதலில் வேறு ஒரு பெயரில் வெளியிடப்பட்டது. அந்தப் பெயர் என்ன? அதை எழுதியவர் யார்?
5. மேரி என் வான்ஸ், எரிக்ப்ளேயர் இவை புகழ்பெற்ற எழுத்தாளர் பெயர்கள். அவர்களது உண்மையான பெயர்கள் என்ன?

## விடைகள்

### உங்களுக்குத் தெரியுமா?

1. கர்நாடக மாநிலத்தில் குடகுப் பகுதியில் ஆண் குழந்தை பிறந்ததும் வில், அம்புகளைக் கொடுத்தும் துப்பாக்கியையும் அதன் கையில் கொடுக்கிறுர்கள்.
2. கர்நாடக மாநிலத்தில் உள்ள ஜோக் நீர்வீழ்ச்சி இதன் உயரம் 253 மீட்டர்.
3. காஷ்மீரில் தால்எரியில் சுற்றி வர உபயோகப்படுத்தப்படும் படகுகள்.
4. முதலாவது 17 மீட்டர் உயரம். இரண்டாவது 71 மீட்டர் உயரம்

### இலக்கியம்

1. லீலாவதி
   சித்தாந்த சிரோமணி
2. மைகேல்ஷோபாகோவ்-
   1965ல்.
3. தி பிஸியாலஜி
   ஆப் விஷன்
4. 1934, ஜார்ஜ் ஆர்வெல்
5. ஜார்ஜ் இலியெச்
   ஜார்ஜ் ஆர்வெல்



## பெர்சியஸ்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

துணிச்சல் கொண்ட பெர்சியஸ் மெடுசா பூதத்தைக் கொன்று அதன் தலையை வெட்டி எடுத்துக் கொண்டு திரும்பி வருகையில் ஆண்டரோ மிடா என்ற பெண்ணை ஒரு பயங்கரப்பிராணி விழுங்க வருவதைக் கண்டான். அவன் அதனைக் கொன்று அவளைக் காப் பாற்றினன். அப்பெண்ணின் பெற் றேர்கள் அவளைப் பெர்சியஸிற்கே விவாகம் செய்து வைத்தார்கள்.

விவாகம் முடிந்ததும் ஆண்ட்ரோ மிடாவைக் கவர்ந்து செல்ல இளவரசன் பீனியஸ் முயன்ருன். பெர்சியஸ் அவனுக்கும் அவனது ஆட்களுக்கும் மெடுசாவின் தலையைக்காட்டி எல்லோரையும் கற்சிலைகளாகும்படிச் செய்துவிட் டான்.






பெர்சியஸ் ஆண்ட்ரோமிடாவை அழைத்துக்கொண்டு தன் தாய் இருக்கும் தீவை அடைந்தான். அப் போது அவனது தாயார் அத்தீவின் மன்னனின் கொடுமைகளைத் தாளா மல் அங்கும் இங்கும் ஓடித்தன்னை காத்துக் கொள்ள முயன்று கொண் டிருந்தாள். அதைக் கண்ட பெர்சியஸ் அம்மன்னனுக்கு மெடுசாவின் தலையைக்காட்டி அவனையும் கற்சிலை யாக்கினன்.



அதன்பிறகு பெர்சியஸ் இனியும் மெடுசாவின் தலையை உபயோகிக்கக்கூடாது என நினைத்து ஆலயத்திற்குச் சென்று அதனை மினர்வாதேவதைக்கு அர்ப்பணம் செய்தான். இனிமேல் தன் சக்தியைக் கொண்டே செயல்பட அவன் தீர்மானித்துக் கொண்டான். அந்த ஆலயத்தில் தியானத்தில் இருந்து விட்டுப் பிறகு தன் நாடான ஆர்கோஸிற்குப் போக நினைத்தான்.

பெர்சியன் தன் மனைவியையும் தாயாரையும் கூட்டிக்கொண்டு ஆர்கோஸிற்குக் கிளம்பினான். சிறு குழந்தையாக இருந்த அவனும் அவன் தாயும் அவனது தாத்தாவால் கடலில் தள்ளப்பட்டார்கள். இப்போதோ பெர்சியஸ் பெரும் புகழுடன் அழகிய இளைஞனாய்த் தன் நாட்டில் அடி எடுத்து வைத்தான்.






அவன் சென்ற கப்பல் கடற்கரையை அடைய அவன் அதிலிருந்து இறங்கியதும் வேறுநாட்டு மன்னனே அவனையும் அவனது மனைவியையும் தாயையும் வரவேற்றான். ஏழைகளுக்கு உணவளித்தான். அந்த மன்னன் ஏற்பாடு செய்த எல்லா விழாக்களிலும் போட்டிகளிலும் கலந்து கொள்ள பெர்சியஸ் சம்மதித்தான்.

அங்கு போட்டிகளில் கலந்து கொண்ட பெர்சியஸ் ஒரு கனமான சக்கரத்தைச் சுழற்றி எறிந்தான். அது குறிப்பிட்ட இடத்திற்கும் அப்பால் வெகுதூரம் போய் விழுந்து அங்கு வந்து கொண்டிருந்த ஒரு மனிதனைத் தாக்கியது.





அடிபட்ட அந்த மனிதனின் உயிர் அப்போதே போய்விட்டது. அவன் பெர்சியஸின் தாத்தாவான ஆர்கோஸ் மன்னனாக இருந்த அக்ரீஸியஸே. தன் பேரனைக் காணக் கூடாது என்பதற்காக அவன் மறைந்திருக்க முயன்றான். ஆனால் பெர்சியஸ் எறிந்த சக்கரத்தால் அடிபட்டு இறந்தான். சோதிடர்கள் கூறியது உண்மையாயிற்று!

பெர்சியஸ் ஆர்கோஸின் மன்னனானான். ஆனால் தன் தாத்தாவின் மரணத்திற்குத் தானே காரணம் என்பதை நினைத்து அவன் கவலைப் பட்டான். அதனால் தன் தாத்தா அமர்ந்த அரியாசனத்தின் மீது அவன் அமர விரும்பவில்லை.





பெர்சியஸ் மைசினல் என்ற புதிய நகரை உருவாக்கி அங்கிருந்து நாட்டை ஆண்டான். அவனும் ஆண்ட்ரோமிடாவும் மக்களின் மனதைக் கவர்ந்து நீண்ட காலம் நல்ல விதமாக ஆட்சிபுரிந்தார்கள்.

பெர்சியஸ் இறந்தபின் மக்கள் அவனைக் கடவுளின் அம்சமாகக் கருதி வழிபட்டனர். அவனது உருவச் சிலையை நிறுவினுர்கள். அச் சிலை அப்பகுதிக்கே நீண்ட காலத்திற்கு மரியாதைச் சின்னமாக விளங்கியது.






பெர்சியஸின் புதல்வர்களில் ஒருவனை பெர்சஸ் பெர்ஷியா நாட்டை நிறுவினுன். பெர்ஷியர்கள் இந்தப் பெர்சஸின் சந்ததியார்களெனக் கருதப்படுகிருர்கள். பெர்ஷியர் வாழ்க்கை எவ்வளவோ கதைகளையும் கவிதைகளையும் காவியங்களையும் நாடகங்களையும் படைக்க எழுத்தாளர்களுக்கு உதவியுள்ளது. மகான் அரவிந்தர்கூட பாரசீக மொழியில் ஒரு நாடகத்தை எழுதியுள்ளார்



# அமைச்சர் திலகம்

விதேக நாட்டை விசித்திரசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்குத் தன் மந்திரி ஊழல் புரிந்து லஞ்சம் வாங்குபவன் என்பது தெரிந்தது. அதனால் அவனை விலக்கிவிட்டு நல்ல ஒரு அமைச்சரை நியமிக்கத் தீர்மானித்து அப்படிப்பட்டவரைத் தேடலானான்.

அவன் ஊர்ஊராகப் போய்ப் பார்க்கையில் ஒரு கிராமத்தில் குருகுலம் நடத்தி வரும் ஞானசேகரர் என்பவரைப் பற்றி நல்லவிதமாகக் கேள்விப்பட்டான். எனவே அவன் அவருக்கு கடிதம் எழுதித் தன்னை சந்திக்க வருமாறு வேண்டினான்.

கடிதத்தைப்படித்த ஞானசேகரர் ஆச்சரியப்பட்டவாறே தலைநகருக்குச் சென்றார். மன்னனும் அவரைத் தன் அமைச்சராக நியமித்துக்கொள்ளப் போவதாகக் கூறவே அவரும் "அரசே! நான் என் குருகுலத்தை நடத்தி வருவதில் மிகவும் திருப்தி அடைகிறேன். அரசியலில் புக நான் விரும்பவில்லை, எனக்கு மந்திரிப் பதவி வேண்டாம். என் குருகுலத்தையே நான் தொடர்ந்து நடத்தி வர விட்டுவிடுங்கள்" என்று பணிவுடன் கூறினார்.

விசித்திரசேனன் ஞானசேகரிடம் "நீங்கள் பதவியை விரும்பமாட்டீர்கள் என்பது எனக்குத் தெரிந்ததே. ஆனால் உங்கள் சேவை நாட்டிற்குத் தேவை. எனது தற்போதைய மந்திரி தயாநிதி ஊழல் மன்னன் என்று பெயர் பெற்றுவிட்டான். அவனை அகற்றினாலே மக்கள் நிம்மதியாக வாழ முடியும். அவன் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்து மக்களை அச்சுறுத்தித் தனக்குப் பணம் சேர்த்துக்கொண்டிருக்கிறான். அவனுக்குப் பல அதிகாரிளும் உடந்தை. எனவே

—சிவனார் செல்வன்—



அவனையும் அவனுக்கு உதவும் அதிகாரிகளையும் பதவி நீக்கம் செய்ய வேண்டும். மக்களுக்கு இந்த நன்மை புரியத் தாங்கள் தாம் உதவ வேண்டும். பொதுநலனைக் கருதி நீங்கள் இப்பதவியை ஏற்கத்தான் வேண்டும்'' என்று வேண்டினான். ஞான சேகரரும் அமைச்சர் பதவியை ஏற்றுக் கொண்டார்.

திடீரென ஞானசேகரர் அமைச்சராக்கப்பட்டுத்தான் பதவி நீக்கம் செய்யப்பட்டது கண்டு கண்டு தயாநிதி திகைத்துப் போனான். முன்னதாகவே இப்படி நடக்கும் என்று தெரிந்திருந்ததால் அவன் தான் புரிந்த ஊழல்களுக்கான சாட்சியங்களை அழித்திருப்பான். ஞான சேகரர் பதவி ஏற்றதுமே, அவன் புரிந்த ஊழல்களைக் கண்டுபிடித்து அவை பற்றி விசாரிக்க உத்திர விட்டு விட்டார்.

அவர் தயாநிதியிடம் விளக்கம் கேட்டபோது அவன் ''தவறுகள் நடந்தது உண்மையே. நான் நிரப ராதி. என் கீழ்பணிபுரிந்த அதிகாரி களை நம்பி மோசம் போய்விட் டேன். அவர்கள்தாம் உண்மையான குற்றவாளிகள்'' என்றான்.

தயாநிதியின் பதிலைக் கேட்டு ஞானசேகரர் வியப்படையவில்லை. ஏனெனில் ஊழல் புரிந்தவர்கள் எப்போதுமே தாம் அவ்வாறு செய்யவில்லை என்றும்தம்கீழ் பணி புரிபவர்கள்தாம் அவ்வாறு செய் திருப்பார்கள் என்பதும் இயல்பே. எனவே அவர்களையும் விசாரித் துப் பார்த்தால் உண்மை தெரிந்து விடும் என ஞானசேகரர் நினைத் தார்.

தயாநிதியின் கீழ்நேரடியாக வேலை செய்தவர்கள் நூறு அதிகாரி கள். ஞானசேகரர் அவர்களை எல் லாம் அழைத்து விசாரித்தார். அவர்களோ தாமாக எதுவும் செய்யவில்லை என்றும் எதுவும் தயாநிதியின் கட்டளைப் படித்தான் நடந்தது என்று கூறினார்கள்.

அதுகேட்டு அவர் ''தயாநிதி தான் இவ்வாறு செய்யச் சொன்னார் என்பதற்கு சாட்சியங்கள் அல்லது அத்தாட்சிகள் இருக்கின்றனவா?'' என்று கேட்டார். அவர்களில் ஒரு

வன் "ஓ! அவர் புரிந்த ஊழல்களை நிரூபிக்க ஏராளமான அத்தாட்சி கள் உள்ளன" என்றான்.

அப்போது ஞானசேகரர் "சரி. நாளை மீண்டும் உங்களை விசாரிக் கிறேன். இப்போது நீங்கள் போக லாம்" என்று கூறி அவர்களை அனுப்பி விட்டார். பின்னர் அவர் தயாநிதியை அழைத்துக் கொண்டு மன்னரைக் கண்டார். அவர் மன்ன னிடம் "அரசே! இவரின் கீழ் பல அதிகாரிகள் இருந்தாலும் அவர் களின் அன்பை இவரால் பெற முடியவில்லை. அதனால்தான் இவ ரது பதவி போனதும் அவர்கள் எல்லோரும் இவருக்கு நேர் எதி ராகத் திரும்பி விட்டார்கள். நாளை யும் அவர்களை விசாரித்து விட்டு இவரைப் பற்றிய முடிவு எடுக்க லாம்" என்றார்.

மறுநாள் விசாரணையைக்கான மன்னனும் ஞானசேகரரின் பக்கத் தில் அமர்ந்தான். அவர் எப்படி விசாரிக்கப் போகிறார் என்று தெரிந்து கொள்ளும் அவாவே அவனை அவ்வாறு செய்ய வைத் தது. இருவரும் தனி அறையில் இருந்தனர். அதிகாரிகளை ஒவ்வொரு வராக அந்த அறைக்கு வரும்படி ஞானசேகரர் கூறினார். முதலில் வந்த அதிகாரியிடம் அவர் "மந் திரியாக இருந்த தயாநிதியைப் பற்றி உனக்கு என்ன தெரியுமோ சொல்" என்றார்.



அந்த அதிகாரியும் தயாநிதி யின் கெட்ட குணங்களை எல்லாம் வரிசையாகக் கூறினான். அப்போது ஞானசேகரர் "அவரிடம் ஏதா வது நல்ல குணம் உண்டா?" என்று கேட்கவே அந்த அதிகாரியும் "அப் படி ஒன்றும் இல்லை" என்று கூறி னான். அவர் அவனைப் போகச் சொல்லிவிட்டு அடுத்தடுத்து வந்த அதிகாரிகளிடமும் அதே கேள் வியைக் கேட்டார். வந்தவர்களில் தொண்ணூறு பேர்கள் தயாநிதி யிடம் நற்குணம் எதுவும் இருப்ப தாகத் தமக்குத் தெரியவில்லை என்று கூறினார்கள். பத்துப் பேர் கள் மட்டும் தயாநிதியிடம் ஒரு சில நற்குணங்கள் இருப்பதாகக் கூறி அவை யாவை என்று கூறினார்

கள். மொத்தத்தில் எல்லோர் கூறியதிலிருந்து தயாநிதி எந்த வேலையையும் நயத்தாலோ அல்லது பயத்தாலோ சாதிக்கும் திறமை படைத்தவன் என்பது தெரிந்தது.

எல்லாம் முடிந்தபின் பின் ஞானசேகரர் தயாநிதியிடம் நற்குணங்களும் உள்ளன என்று கூறிய பத்து அதிகாரிகளை மட்டும் வேலையில் வைத்துக் கொண்டு மீதத் தொண்ணூறு பேர்களையும் வேலையை விட்டு நீக்கிவிடும்படிக் கூறினார். தயாநிதியைச் சிறைச்சாலையில் கைதிகளைப் பராமரிக்கும் அதிகாரியாக நியமிக்கும்படி அவர் மன்னனுக்கு யோசனை கூறினார்.

மன்னனோ "இவ்வளவு ஊழல்கள் புரிந்தவனுக்குப் புதுப்பதவியா? அவனை தண்டிக்க அல்லவா வேண்டும்?" என்று கேட்டான். ஞானசேகரரும் "நாம் இப்போது அவனுக்குக் கொடுக்கும் பதவியே ஒரு தண்டனைதான். ஏனெனில் சிறைச்சாலைக் கைதிகளைப் பராமரிப்பது என்றால் தயாநிதி சிறைச்சாலைக்குள் இருந்துதானே அவர்களது நலன்களைக் கவனிக்க வேண்டும். அவனிடம் பல கெட்ட குணங்களோடு சில நல்ல குணங்களும் நிர்வாகத் திறமையும் உள்ளன. எனவே நாம் இப்பதவியைக் கொடுப்பதால் அவனுக்கு ஆயுள் முழுவதும் சிறையில் இருக்கும் தண்டனையையே அளிக்கிறோம்" என்றார்.

மன்னனும் "ஆகா! நீங்கள் தாம் அமைச்சர் திலகம். ஒரு அதிகாரி நற்குணங்களும் கொண்டு நிர்வாகத் திறமையும் படைத்தவனாக இருக்க வேண்டும் என்றும் பிறரிடம் தவறுகள் மட்டுமே காணக்கூடாது, நல்லதையும் காண வேண்டும் என்றும் எடுத்துக்காட்டி விட்டீர்கள். நீங்கள் கூறியபடியே நடந்து கொள்கிறேன்" என்றான்.

அதன்பின் மன்னன் ஞானசேகரரின் யோசனைகளைக் கேட்டு அவற்றின்படி நடந்து நல்லவிதமாக ஆட்சி புரிந்து வரலானான்.






அனுமார் லங்காபுரிக்குள் சென்ருர். அங்கு அவர் பலரக ராட்சஸர்களைக் கண்டார். சிலர் வேத மந்திரங்களை ஓதிக் கொண்டிருந்தார்கள். சிலர் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தார்கள். சிலர் சடை முடிகள் தரித்தும் சிலர் மிருகங்களின் தோல்களை ஆடையாக உடுத்தியும் இருந்தார்கள். சிலர் ஆயுதங்களைக் கையில் ஏந்தித் திரிந்து கொண்டிருந்தார்கள். சிலர் குள்ளமாயும் வேறு சிலர் கருப்பாயும் இருந்தனர். சிலர் விகாரமாயும் வேறு சிலர் பார்க்க அழகாயும் இருந்தனர்.

இரவுப்பொழுது கழிந்து கொண்டிருந்தது. நிலா வெளிச்சம் இருந்தது. அனுமார் இராவணனின் அரண்மனைக்குள் நுழைந்தார். பெண்கள் பாடிக்கொண்டிருந்தார்கள். சிலர் தம் உடல் முழுவதும் சந்தனத்தைப் பூசிக் கொண்டிருந்தார்கள். வேறு சிலர் அப்போது தான் தூங்கப் போய்க்கொண்டிருந்தார்கள்.

தான் பார்த்த பெண்களில் மானிடப் பெண்ணான சீதை இருக்கிருளா என்று அவர் பார்த்தார். ஆனால் அப்படிப்பட்ட பெண்ணை அவர் காணவில்லை. அதனால் அவர் கவலைப்படலானார். எனவே அந்த அரண்மனையில் அங்கும் இங்கும் திரிந்து மூலைமுடுக்கு விடாமல் தேடிப்பார்க்கலானார்.

அந்த அரண்மனை அற்புதமாய் அமைந்திருந்தது. கதவுகளும் ஜன்



னல்களும் தங்கத்தாலும் வெள்ளியாலும் உருவாக்கப்பட்டு ஆங்காங்கே நவரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தன. தோரணங்சள் கட்டப்பட்டிருந்தன. உயர்ஜாதிக் குதிரைகளும் யானைகளும் கட்டுத்தறிகளில் கட்டப்பட்டும் இருந்தன.

கட்டுமஸ்தாக உள்ள இராட்சஸர்கள் அதனைக் காவல்புரிந்து கொண்டிருந்தனர். அவர்களதும் மற்றும் பல ராட்சஸர்களது நடமாட்டங்களும் அங்கு அமளியை ஏற்படுத்தியது. எங்கும் சுக வாழ்வின் அறிகுறிகளே தென்பட்டன. அந்த அரண்மனை இலங்காபுரிக்கே ஒரு அணிகலனாக விளங்கியது.

அனுமார் அந்த மாளிகையில் கட்டில்கள், நாற்காலிகள், ஆசனப் பலகைகள், தங்க வெள்ளிப் பாத்திரங்கள் ஏராளமாக இருப்பதைக் கண்டார். சுவர்களிலும் கதவுகளிலும் சித்திர வேலைப்பாடுகளைக் கண்டார். அங்கிருந்த புஷ்பக விமானத்தையும் அவர் கண்டார். ஒரு காலத்தில் அது குபேரனுடையதாக இருந்தது. அது எவ்வளவு பேர்களை வேண்டுமானாலும் ஏற்றிச் செல்லக்கூடியது. அதைக் கண்டு ஆச்சரியப்பட்டவாறே அனுமார் இன்னும் பல இடங்களைப் பார்த்தார். எங்கும் அவர் காண விரும்பிய சீதையைக் காண முடியவில்லை.

அவர் இராவணனின் அந்தப்புரத்திற்குள் சென்றார். அங்கு இராவணனின் மனைவிகள் இருந்தனர். அவர்களில் சிலர் ராட்சஸப் பெண்கள். வேறு சிலர் இராவணனின் பராக்கிரமத்தால் வென்று கொண்டுவரப்பட்ட அரச குமாரிகள். வேறு சில பெண்கள் அவனை விரும்பி மணந்தவர்கள். அந்தப்புரத்தில் எங்கும் விளக்குகள் ஏற்றப்பட்டு ஒளி வீசிக் கொண்டிருந்தது.

அவர்கள் யாவரும் ஆழ்ந்த நித்திரையில் இருந்தார்கள். ரத்தின கம்பளங்களில் படுத்திருந்த அவர்கள் பட்டாடைகளையும் பலவித நகைகளையும் அணிந்திருந்தார்கள். நள்ளிரவுக்கு மேலாகி விட்டதால் அவர்களும் அங்கு காவல் புரிபவர்

களும் தாம் இருந்த இடத்திலேயே தூங்கிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சி பார்ப்பதற்கு வேடிக்கையாகவும் இருந்தது.

அனுமார் அவர்களை எல்லாம் கூர்ந்து பார்த்தார். அவர் கட்டிலில் படுத்துள்ள இராவணனையும் கண்டார். அவனது கைகள் மலைப் பாம்புகளைப் போல இருந்தன. அவனது உடலில் செஞ்சந்தனம் பூசப்பட்டிருந்தது. அவன் படுத்திருந்தது மலைபோல இருந்தது.

இராவணனது கட்டிலுக்கு அடுத்த கட்டிலில் அவனது மனைவி படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள். அவளது அழகையும் இளமையையும் கண்ட அனுமார் அவள்தான் சீதையோ என முதலில் நினைத்து விட்டார். ஆனால் மறுகணமே இராமரை விட்டுப்பிரிந்த சீதை இப்படி சுகமாக, நகைகளை அணிந்து, இராவணனின் கட்டிலின் பக்கம் படுத்திருக்க முடியாது என்று அவர் மனம் கூறியது. எனவே அவள் இராவணனின் பட்டத்து ராணி மண்டோதரியாகத்தான் இருப்பாள் என ஊகித்து அங்கிருந்து சென்றார்.

அதன் பிறகு அனுமார் இலங்கையிலுள்ள ஒவ்வொரு மாளிகைக்குள்ளும் வீட்டினுள்ளும் போய் சீதை இருக்கிறாளா என்று பார்க்கலானார். சீதையை எங்குமே காணாததால் சீதை ஒருவேளை இறந்து விட்டாளோ அல்லது இராவணன்



கவர்ந்து சென்ற போது கடலில் விழுந்து விட்டாளோ என்று கூடச் சந்தேகிக்கலானார். ஆனால் அவர் மனமோ "நீ மனம் தளராதே. உன் முயற்சியைத் தொடர்ந்து செய். நல்ல பலனே கிட்டும்" என்று கூறியது.

சரி இங்குதான் சீதாதேவி தென்படவில்லையே, இனி இலங்காபுரிக்கு வெளியே உள்ள இடங்களில் சீதையைத் தேடிப் பார்க்கலாம் என்று அவர் நினைத்தார். அதன்படி மேடு பள்ளங்களைக் கடந்து சென்றார். காடுகளைத் தாண்டிச் சென்றார். வழியில் எவ்வளவோ ராட்சசப் பெண்களை அவர் பார்த்த போதிலும் சீதையை மட்டும் காணவே இல்லை.



அழகான பெண்ணை அவர் பார்த்த போதெல்லாம் அவள் சீதை யாக இருக்குமோ என்று பார்த்து விட்டு இல்லை எனக்கண்டு கொண் டார். சீதையைக் காணுமல் அங்கி ருந்து கிஷ்கிந்தாபுரிக்குப் போகக் கூடாது. ஒருவேளை சீதையைக் காணவே முடியவில்லை என்ருல் இங்கேயே தன் உயிரை மாய்த்துக் கொண்டுவிட வேண்டும் என்றும் அவர் தீர்மானித்துக் கொண்டார்.

அதைவிட வேறு ஒரு யோசனை யும் அவருக்குத் தோன்றியது. தான் எங்குமே சீதையைக் காணுவிட்டால் இராவணனை ஒரேகட்டாகக் கட் டித்தூக்கிக் கொண்டு போய் இரா மர் முன் உருட்டிவிட வேண்டும் அல்லது அவன் தலையை வெட்டி எடுத்துப் போய் இராமரின் காலடி யில் போட்டு விடவேண்டும்.

இப்படிப் பல விதமாக அனுமார் யோசித்துக் கொண்டு செல்கையில் சற்று தூரத்தில் உயர்ந்த மரங்கள் வளர்ந்துள்ள ஒரு வனத்தைக் கண் டார் அதுதான் அசோகவனம். அந்த வனத்தில் சென்ற அனுமார் அது மற்றவற்றிலிருந்து சற்று வேறு பட்டு அழகாக இருப்பதை அவர் கவனித்தார். ஒருவேளை சீதை இங்கே இருந்தாலும் இருக்கலாம். இங்கும் நன்கு தேடிப்பார்த்துவிட வேண்டும் என்று அவர் முடிவு செய்து கொண்டார்.

அவர் உற்சாகத்தோடு துள்ளிக் குதித்தவாறே அந்த அசோகவனத் திற்குள் சென்ருர். அவர் தன் உரு வத்தை மிகவும் சிறிதாக ஆக்கிக் கொண்டு ஒவ்வொரு மரத்தின் மீதும் ஏறிச் சுற்றிலும் பார்த்து விட்டு அடுத்த மரத்திற்குத் தாவ லானுர். அது வசந்தகாலம். மரங் களிலும் செடிகளிலும் புதிய இலை கள் வந்திருந்தன. சாலமரங்கள் அசோகமரங்கள், சம்பகமரங்கள் உத்தால மரங்கள், நாகமரங்கள், மாமரங்கள் நன்கு வளர்ந்திருந்தன. மற்றும் விதவிதமான செடிகள் துளிர்விட்டுப்பச்சைப் பசேலென அப்பகுதியையே மிளிரச் செய்தன. கொடிகளோ மரங்களைச் சுற்றித் தழுவிக் கொண்டிருந்தன.

அனுமார் அங்கு வளர்ந்திருந்த



மரங்களிடையே அம்பு போலப் பாய்ந்து சென்றார். அவர் சென்ற வேகத்தில் அந்தந்த மரங்களில் இருந்த பறவைகள் பயந்து சிறகுகளை அடித்துக் 'கீச்சு' கீச்சென்று கத்தின. மரங்களின் பூக்கள் அவர் மீதும் தரை மீதும் விழுந்தன. அந்த அசோகவனத்தில் அவர் பல சிற்றோடைகளையும் ஆங்காங்கே அமர உயர்ந்த ஆசனங்கள் வைக்கப்பட்டிருந்ததையும் அவர் கண்டார். இவற்றில் ஒரு சில தங்கத் தகடுகளால் மூடப்பட்டு மிகுந்த வேலைப்பாடுகளுடன் கூடியதாக விளங்கின.

அசோகவனத்தில் ஒரு உயர்ந்த குன்றையும் அவர் கண்டார். அதன் மீது பல மாளிகைகளையும் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருந்த மரங்களையும் அவர் பார்த்தார். அக்குன்றிலிருந்து ஒரு சிறிய ஆறு கிளம்பி கீழ் நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. அங்கு ஓரிடத்தில் படிக்கட்டுகளுடன்கூடிய சிறிய அழகிய நீர் நிலையும் இருந்தது. அதன் கரைகளில் அமர ஆசனங்கள் இருந்தன.

அனுமார் அங்கு ஒரு உயரமான மரத்தின் மீது அமர்ந்து சற்று நேரம் சுற்றிலும் கூர்ந்து பார்த்தார். சற்று தூரத்தில் வெள்ளை நிறத்தில் ஒரு அழகிய அமைப்பு தெரிந்தது. அங்குதான் அவர் சீதை இருப்பதைக் கண்டார்.

சீதை மிகவும் இளைத்துப் போயிருந்தாள். அழுக்கேறிக் கசங்கிய புடவையை உடுத்தி இருந்தாள். மிகுந்த கவலையுடன் கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றிலும் ராட்சஸ பெண்கள் இருந்தார்கள். இராவணன் சீதையை ஆகாய வழியாகக் கவர்ந்து சென்ற போது அனுமார் சீதையைப் பார்த்திருந்ததால் அவரால் அங்கிருப்பவள் தான் சீதை என்று கண்டு கொள்ள முடிந்தது.

அவளது உருவில் சற்று மாற்றம் ஏற்பட்டிருந்தாலும் முற்றிலும் மாறிவிடவில்லை. அவள் ரிஷியமுக பர்வதத்தின் மீது சில நகைகளைப் போட்டாள் அல்லவா? அந்த நகைகள் இருக்க வேண்டிய இடங்கள் அவளது உடலில் வெற்றிடங்களாகவே இருந்தன. அவள்

உடலில் இருந்த மற்ற ஆபரணங்கள் இராமர் கிஷ்கிந்தையில் அவரிடம் வர்ணித்தது போலவே இருந்தன. இவற்றைக் கொண்டே அவள் சீதையாகத்தான் இருக்க வேண்டும் என்று அனுமார் தீர்மானித்தார்.

சீதையைக் கண்டு விட்டதால் அவர் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. தான் ராட்சஸப் பெண்களின் கண்களில் படாமல் இருக்க வேண்டும் என்பதற்காக இலைகள் அடர்ந்து வளர்ந்திருந்த ஒரு உயர்ந்த கிளை மீது அமர்ந்து கொண்டார். அங்கிருந்து சீதை அமர்ந்திருந்த இடத்தில் நடப்பதை எல்லாம் அவரால் பார்க்க முடிந்தது.

இரவு அநேகமாக முடிந்து விட்டது. ராட்சஸர்கள் மந்திரங்களை உச்சரிப்பது அனுமாரின் காதில் விழுந்தது. அதேசமயம் மங்கள வாத்தியங்கள் முழங்கின. இராவணன் தூக்கம் கலைந்து எழுந்தான். அவனுக்கு உடனே சீதையின் நினைவு தான் வந்தது. அவன் உடனே தன்னை நன்கு அலங்கரித்துக் கொண்டு கிளம்பினான். அவன் பின்னால் நூறு தேவப் பெண்மணிகளும் கந்தர்வப் பெண்களும் வந்தார்கள். அவர்களில் சிலர் தங்கப் பிடி கொண்ட தீவட்டிகளை ஏந்தி வந்தார்கள். வேறு சிலர் சாமரங்களை வீசிக் கொண்டு வந்தர்கள். சில பெண்கள் தங்கப் பாத்திரங்களில் தண்ணீர் கொண்டு வந்தார்கள். வேறு சிலர் கத்திகளைத் தம் கையில் பிடித்தவாறே அவன் பின்னால்



சென்றூர்கள். ஒருத்தி இராவண னுக்குக் குடை பிடித்துச் சென் றூள்!

அவர்கள் நடந்து வரும் சல சலப்பை அனுமார் கவனித்தார். அவர் இராவணன் போவதைக் கண்டு அவன் என்ன செய்யப் போகிறுன் என்று பார்க்கலாஞர். இராவணனும் கம்பீரமாக நடந்து போய் சீதையின் முன் நின்றுன்.

சீதை இராவணன் வருவதைக் கண்டு நடுங்கி விட்டாள். அவள் கால்களே மடக்கிக் குறுகிக் கொண்டு தன் இருகைகளாலும் தன் மார்பை இறுகப் பிடித்துக் கொண்டும் கண் ணீர் வடித்தவாறே இருந்தாள். அவள் தனக்கு உதவ யாராவது வருவாரா என்று சுற்றிலும் பார்க்க லாஞள்.

அப்போது இராவணன் "சீதையே! என்ஃனக் கண்டு ஏன் இப்படி பயப் படுகிறுய்? உன் அழகைக் கண்டு நான் மயங்கி விட்டேன். என்ஃன நீ ஏற்றுக் கொள். இங்கு நீ எனக்கோ அல்லது வேறு யாருக்குமோ பயப் பட வேண்டாம். உனக்கு என் மீது அன்பு ஏற்படும் வரை நான் உன் ஃனத் தொடக்கூட மாட்டேன். கவ ஃலப்படாதே. இப்படி அழுக்கான புடவையை ஏன் கட்டிக் கொண் டிருக்கிறுய்? ஏன் பட்டினி கிடக் கிறுய்? தஃலவிரி கோலமாக ஏன் இருக்க வேண்டும்? மலர் மாஃல அணிந்து நல்ல உடை உடுத்து நல்ல உணவு உண்ணலாமே. சுக போகங்களில் அரண்மஃனயில் வாழ்ந்து அனுபவிக்கலாமே. உன் இளமையைப் பாழாக்கிக் கொள் ளாதே. என்ஃன அன்னியஞகக் கருதாதே. நான் உன்ஃன என் பட் டத்து ராணி ஆக்குகிறேன். நான் உன் அடிமை. நீ சொல்கிறபடி நடக்கிறேன். காட்டின் திரியும் அந்த இராமன் இனி உனக்கு எதற்கு? அவன் இன்னமும் உயிரோடு இருக் கிறுன் என்று நீ நிஃனக்கிறுய்! அவன் உன்ஃனப் பார்ப்பதற்குக் கூட இங்கே வரமுடியாது" என்றுன்.





# காக்கை விடு தூது!

வெகுகாலத்திற்கு முன் காஷ்மீரத்தில் ஒரு ஏழை இருந்தான். அவன் தினமும் காட்டிற்குப் போய் அழகான பறவைகளைப் பிடித்து விற்றுத் தன் மகன் சிகாமணியை வளர்த்து வந்தான். சில ஆண்டுகளுக்குப் பின் அந்த ஏழை இறந்து விடவே சிகாமணி தன் தந்தை செய்து வந்த தொழிலேயே மேற்கொண்டான்.

தந்தை இறந்த மறுநாளே அவன் காட்டிற்குப் போய் ஓரிடத்தில் வலேயை விரித்து உட்கார்ந்தான். சற்று நேரத்தில் அந்த வலேயில் ஏதோ ஒரு பறவை சிக்கியது. அவன் அதனருகே போய் பார்த்தபோது அது ஒரு காகம் என்று தெரிந்தது. காக்கையை யார் விலே கொடுத்து வாங்கப் போகிறுர்கள் என்று சிகாமணி நினைத்தபோது அது அவனைப் பார்த்து "நீ என்னை விட்டு விட்டால் உனக்கு உபகாரமே செய்வேன். நாளை நீ விரிக்கும் வலேயில் மிக அழகான பறவை ஒன்று விழும்படிச் செய்வேன். அதனை நீ இந்நாட்டு மன்னனிடம் விற்றுல் உனக்கு நிறையப் பணம் கிடைக்கும்" என்றது.

ஒரு காக்கை மனிதனைப் போலப் பேசுவது கண்டு சிகாமணி ஆச்சரியப்பட்டான். அது சொல்வதை நம்புவதா அல்லது வேண்டாமா என்ற சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டது. ஆனுல் அதைப்பிடித்துக் கொண்டு போனுலும் அதை யாரும் விலேக்கொடுத்து வாங்க மாட்டார்களே என்று நினைத்து அது கூறியபடிச் செய்து தான் பார்க்கலாமே என்று எண்ணினுன்.

காக்கை கூறியதை நம்பி சிகாமணி அதை வலேயிலிருந்து எடுத்துப் பறக்க விட்டான். மறுநாள்

—காஷ்மீர நாட்டுப் பழங்கதை—



அவனது வலையில் காக்கை வாக் களித்தபடி ஒரு அழகிய பறவையை விழ வைத்தது. அவ்வளவு அழகான பறவையை அவன் அதற்கு முன் பார்த்ததே இல்லை. அவன் அதை எடுத்துப் போய் அந்நாட்டு மன்ன னிடம் கொடுக்கவே மன்னனும் மிகவும் மகிழ்ந்து போய் ஏராள மான தங்கத்தை சிகாமணிக்குக் கொடுத்தான்.

ஒரு பறவைக்கு அவ்வளவு தங் கத்தை ஏழை பெற்று விட்டானே என்று சமஸ்தான விதூஷகன் பொறுமைப்பட்டான். அதனால் அவன் மன்னனிடம் "அரசே! இவ்வளவு அழகான பறவையைச் சாதாரணமான ஒரு கூண்டில் அடைப்பதா? கூடவே கூடாது. இதற்கு அழகான வேலைப்பாடு மிக்க ஒரு கூண்டைச் செய்ய வேண் டும் அதனால் யானைத்தந்தத்தால் ஆன கூண்டில் இருந்தால்தான் மிக அழகாக இருக்கும். இந்தப் பறவையைக் கொண்டு வந்தவனையே அப்படிப்பட்ட கூண்டைச் செய்ய தந்தம் கொண்டு வரச் சொல்லுங் கள்" என்றான்.

மன்னனும் சிகாமணியிடம் "நம் விதூஷகன் சொன்னது போல இந்தப் பறவையை வைக்க தந்தக் கூண்டு செய்ய வேண்டும். அதற் கான தந்தங்களை நீ நாற்பது நாட் களுக்குள் கொண்டு வந்து கொடுக்க வேண்டும். அப்படிக் கொண்டு வராவிட்டால் உன் தலை போய் விடும்" என்று கூறி அனுப்பினான்.

வீட்டிற்கு வந்து சிகாமணி கவலையில் மூழ்கிப் போனான். கூண்டைக் கட்டும் அளவிற்கு தந்தங்களை சேகரிப்பது என்பது எளிதில் செய்யக்கூடிய வேலையா? என்ன செய்வது என்று அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் காட்டில் அவன் கண்ட காக்கை வந்து "என்ன கவலை இப்போது? சொன்னால் நான் உதவி அதனைப் போக்குகிறேன்" என்றது.

அப்போது சிகாமணி தன் பிரச்னையை அதனிடம் கூறினான். அப்போது காக்கை "நீ சென்ற காட்டின் மத்தியில் ஒரு குளம் உள்ளது. அதில் நீர் குடிக்க யானை

களின் ஒரு பெரிய கூட்டமே வரும். நீ அந்தக் குளத்தில் மதுவைக் கலக்கி விட்டால் அந்த நீரை குடிக்கும் யானைகள் நினைவிழந்து விழுந்து விடும். நீ ஆண் யானைகளின் தந்தங்களை அறுத்து எடுத்துக் கொண்டு போய் மன்னனிடம் கொடு'' என்றது.

சிகாமணியும் ''ஐயோ! அவ்வளவு மதுவை நான் எப்படிச் சேகரிக்க முடியும்?'' எனவே காக்கையும் ''நீ மன்னனிடம் அதனைக் கேள். அதைக் கொடுத்தாலே தந்தம் கொண்டு வரமுடியும் என்று கூறு. மன்னனும் கண்டிப்பாக நீ கேட்ட அளவு மது கொடுப்பான்'' என்றது.

சிகாமணியும் காக்கை கூறிய படியே மன்னனைக் கண்டு தனக்கு ஐம்பது பீப்பாய்கள் சாராயம் வேண்டும் எனக்கேட்டு வாங்கி அவற்றை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு காட்டிற்குள் சென்றான். காக்கை குறிப்பிட்ட குளத்தில் அதைக் கொட்டிவிட்டுக் காத்திருந்தான். யானைக் கூட்டம் வந்தது. எல்லாயானைகளும் குளத்து நீரைக் குடித்து விட்டு நினைவிழந்து கிடந்தன. சிகாமணி தான் கொண்டு வந்த ரம்பத்தால் அவற்றின் தந்தங்களை அறுத்து எடுத்துக் கொண்டு போய் மன்னனிடம் கொடுத்தான்.

அதுகண்டு மகிழ்ந்த மன்னன் மேலும் ஏராளமாய்த் தங்கம் சிகா



மணிக்குக் கொடுக்கவே விதூஷகன் வயிற்றெரிச்சல் அதிகமாகியது. அதனால் அவன் மன்னனிடம் ''அரசே! பறவை தந்தக் கூண்டில் அழகாகவே இருக்கிறது. ஆனால் இது இனிமையாகப் பாடவில்லையே. ஒரு வேளை இதன் முந்தைய சொந்தக்காரரைக் கண்டால் இது பாடலாம். சிகாமணியிடம் சொல்லி அவரை அழைத்து வரச்சொல்லுங்கள்'' என்றான்.

மன்னனுக்கு விதூஷகனின் மனப்போக்கு ஒருவாறு புரிந்தது. அது பிடிக்காமல் போனாலும் அவன் கூறுவது போல அந்தப் பறவை பாடினால் கேட்டு ரசிக்கலாமே என்று எண்ணினான்.

மன்னனும் சிகாமணியை



அழைத்து "நீ இந்தப் பறவையின் முந்தைய சொந்தக்காரரை இன்னும் நாற்பது நாட்களுக்குள் இங்கு கொண்டு வரவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் உன் தலைபோய் விடும்" எனக்கூறி அனுப்பினான்.

கவலை தோய்ந்த முகத்துடன் சிகாமணி வீடு திரும்பினான். அப்போது அவனது காக்கை அவனைக் காணவந்தது. அவனது கவலையின் காரணத்தை அறிந்த அது "கவலைப் படாதே. மன்னனிடம் கேட்டு ஒரு கப்பலை வாங்கிக் கொள். அதில் ஆடம்பரப் பொருள்களை அழகாக வைத்துக் கொண்டு பெரிய நதியின் போனால் நூறு யோசனை தூரம் சென்ற பின் கின்னரர்கள் வாழும் பகுதியை அடைவாய். கின்னரர்கள் உன் கப்பலைக் காண வருவார்கள். அவர்களில் யாரையும் கப்பலில் அனுமதியாமல் அவர்களது ராணிதான் முதலில் கப்பலைப் பார்க்க வேண்டும் என்று சொல். அதுவும் அவள் மட்டுமே வரவேண்டும் என்று கூறு. அவள் கப்பலில் ஏறி எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கையில் நீ கப்பலை ஓட்டிக் கொண்டு வந்து விடு. அவளே அந்தப்பறவையின் சொந்தக்காரி" என்றது.

சிகாமணியும் காக்கை கூறியது போல மன்னனிடம் கப்பலைக் கேட்டு வாங்கி அதனை ஓட்டிக் கொண்டு கின்னரர் வாழும் பகுதியை அடைந்தான். கப்பலைக் காண கின்னரர்கள் வந்த போது அவன் அவர்களது ராணிதான் தனியாக முதலில் கப்பலுக்குள் வந்து பார்க்க வேண்டும் என்றான். ராணியும் கப்பலுக்குள் வந்து அங்குள்ள அதிசயப் பொருள்களைப் பார்த்துக் கொண்டிருந்த போது கப்பல் வேகமாகக் கிளம்பி விட்டது. இது ராணிக்குத் தெரியவில்லை.

கப்பல் சிகாமணியின் காட்டை அடைந்ததும் அவன் கின்னர ராணியை அழைத்துக் கொண்டு அரண்மனைக்குச் சென்றான். கின்னர ராணியைக் கண்டதும் அந்தப் பறவை சந்தோஷத்தோடு பாடலாயிற்று... மன்னன் அது கேட்டு

மகிழ்ந்ததோடு கின்னர ராணியின் அழகைக் கண்டு மயங்கினன். அவன் அவளிடம் அவளை மணக்க விரும்புவதாகக் கூறவே அவளும் அதற்குச் சம்மதித்தாள். கல்யாணத் திற்கான ஏற்பாடுகளை தடபுட லாகச் செய்ய ஆரம்பித்தார்கள். பிரமுகர்களுக்கு எல்லாம் அழைப் புகள் போயின. சிகாமணிதான் அங்கு முக்கியமானவனாக விளங் கினன்.

சிகாமணியோடு அவனது காக்கை யும் திருமணத்திற்கு வந்தது. அதைப் பார்த்ததுமே கின்னர ராணி "அடி பாவி! இங்கேயும் நீ வந்து விட்டாயா?" என்று கூவி னள். அப்போது சிகாமணி "இந் தக் காக்கை என் ஆருயிர் நண்பன் இது சொல்லித்தான் உங்கள் பகுதிக்கு நான் கப்பலை ஓட்டி வந்து உங்களை நான் இங்கே கொண்டு வந்து சேர்த்தேன்" என் ருன். மேலும் அந்தக் காக்கை தனக் குச் செய்த உதவிகளை எல்லாம் அவன் அவளிடம் கூறினன்.

அதைக் கேட்ட கின்னர ராணி மகிழ்ந்து "இவள் என் அந்தரங்கத் தோழியாக இருந்தவள். இவள் ஒரு முறை திமிராக நடந்ததால் காக்கையாகப் போகும்படிச் சபித் தேன். இப்போது அந்த சாபத்தை விலக்கி இவளை முன்போலப் பெண்ணாக ஆக்கிவிடுகிறேன்" என்ருள்.

மறுநிமிடமே அந்தக் காக்கை அழகிய பெண்ணாகி சிகாமணியின் முன் நின்ருள். இதைக் கண்ட மன்னன் மகிழ்ந்து "பேஷ். இவளை எனக்கு உதவிய இந்த சிகா மணிக்கு மணம் முடித்து நம்மோடு வைத்துக் கொள்வோம்" எனக் கூறினன். மன்னன்தான் கின்னர ராணியை மணந்த முகூர்த்தத்தி லேயே அந்தப் பெண்ணை சிகா மணிக்கு மணம் செய்து வைத்தான். தம்பதிகள் சுகமாக நீண்ட காலம் வாழ்ந்தார்கள்.



# புலியா, வேலையா, சொல்!

காட்டூர் பண்ணையாரின் ஆடுகளைக் கந்தன் ஓட்டிக் காட்டில் மேய்த்து விட்டுக் கொண்டு வந்து விடுவான். ஒருமுறை கந்தனுக்குப் பணமுடை ஏற்பட்டது. யாரிடம் கேட்டும் கிடைக்கவில்லை. அதனால் ஒருநாள் பண்ணையாரின் ஒரு ஆட்டை விற்று விட்டான்.

அன்று மாலை வீடு திரும்பிய ஆடுகளைப் பண்ணையார் கணக்கிட்டு ஒரு ஆடு குறைவது கண்டு அது பற்றிக் கேட்டார் கந்தனும் "ஒரு புலி வந்து சாமர்த்தியமாக ஒரு ஆட்டைக் கொன்று விட்டது" என்றான். பண்ணைக்காரரும் அப்படியா என்று கூறி வேறு எதுவும் கேட்கவில்லை.

மறுநாளும் கந்தன் ஒரு ஆட்டை விற்றான். அன்று மாலையும் ஒரு ஆடு குறைந்தது கண்டு அதுபற்றிப் பண்ணையார் கேட்கவே கந்தன் அன்றும் புலிவந்து ஒரு ஆட்டைக் கொன்று தின்றுவிட்டதாகக் கூறினான்.

மறுநாள் கந்தன் ஆடு மேய்க்கப் போகையில் பண்ணைக்காரர் வேட்டைக்கார வேலுவைக் கூட்டிக் கொண்டு காட்டிற்குச் சென்றார். அன்று மாலையாகியும் புலி வரவில்லை. பண்ணைக்காரர் "என்ன புலி வரவில்லையே?" என்று கந்தனிடம் கேட்கவே அவனும் "அது சாமர்த்தியமானது என்று அன்றே சொன்னேனே. நீங்களும் வேட்டைக்காரனும் வந்திருப்பது தெரிந்து கொண்டு விட்டது. அதனால் வரவில்லை. அதற்குத்தான் எவ்வளவு சாமர்த்தியம்!" என்றான்.

பண்ணைக்காரரும் சற்று யோசித்து விட்டு "நாளை முதல் வேட்டைக்கார வேலுவே ஆடுகளை மேய்ப்பான். இனி உனக்கு வேலை இல்லை" என்றார். கந்தன் திகைத்துப் போனான். உடனே அவரது கால்களில் விழுந்து தான் செய்ததை ஒப்புக் கொண்டான். பண்ணைக்காரரும் "சரி இந்தத் தடவை மன்னித்தேன். மறுபடியும் இந்த மாதிரி செய்தால் நீ கம்பி எண்ண வேண்டி வரும்" என எச்சரித்தார். கந்தனும் ஒழுங்காக நடந்து வந்தான்.





# காளியே மனைவி

காளி அந்த ஊருக்கு எங்கிருந்தோ வந்தவள். அவளுக்கு உற்றார் உறவினர் என்று யாருமே இல்லை. அதனால் பொன்னான் என்ற சாதாரணக் குடியானவனின் வீட்டிலும் வயலிலும் வேலை செய்து வாழ்ந்து வந்தாள். பொன்னானே மனைவியை இழந்தவன் வெகுளியான காளி 'மங்கு' மங்கென்று எல்லா வேலைகளையும் செய்து வந்தது கண்டு மிகவும் மகிழ்ந்து போனான்.

கள்ளங்கபடற்ற காளி பொன்னானிடம் "நான்தான் உன் வீட்டு வேலைகளை எல்லாம் செய்கிறேனே. என்னை நீ ஏன் கல்யாணம் செய்து கொள்ளக்கூடாது?" என்று பல முறை சொல்லிப் பார்த்தாள். பொன்னானே "போயும் போயும் உன்னையா கல்யாணம் செய்து கொள்வது? முடியாது" என்று மறுத்துக்கூறிக் கொண்டே வந்தான்.

காளியின் நச்சரிப்பு நாளுக்கு நாள் அதிகமாகவே அதைத் தாங்கமுடியாமல் பொன்னான் அவள் மெய் மறந்து தூங்கும்போது அவள் உடல் முழுவதும் எண்ணெயையும் கருப்பு மையையும் கலந்து பூசி விட்டான்.

காலையில் எழுந்து காளி தன் கைகால்கள் கருப்பாக இருப்பது கண்டு திடுக்கிட்டாள். தன் உருவமே மாறித்தான் ஒரு பிசாசாக ஆகி விட்டாளோ என்று அவள் பயந்து போனாள். தான் யார் என்பதை உறுதி செய்து கொள்ள அவள் பொன்னானிடம் போய் "இங்கே வேலை செய்து கொண்டிருந்தாளே ஒருத்தி. அவள்..? என்று கேட்டாள்.

பொன்னனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அதை அவன் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். தன் திட்டம் பலிக்கப்போவது கண்டு அவன்

—கே. சுதா—



பூரித்துப்போனான். காளியை அவன் ஒரு பிசாசு எனக்கூறி நம்ப வைப்பது என்று தீர்மானித்துக் கொண்டான்.

பொன்னனும் "அவள் எங்கேயாவது கொல்லைப்புறத்தில் வேலை செய்து கொண்டிருப்பாள். நீ அவளைப் பிடிக்க வந்த பிசாசா? போ. அவளைப் போய்ப் பிடித்துக் கொள்" என்று கூறினான். அதை கேட்ட காளிக்குதான் முன்னிருந்த மானிடப் பெண் இல்லை என்றும் ஒரு பிசாசாகத்தான் மாறிவிட்டாள் என்றும் உறுதியாயிற்று. அதனால் அவள் அந்த ஊரை விட்டுக் காட்டை நோக்கி ஓடினாள்.

அங்கே அவள் இரண்டு திருடர்களைப் பார்த்தாள். அவர்களும் அவளைக் கண்டு பிசாசு எனப் பயந்து ஓடத் தொடங்கினார்கள். அப்போது காளி "பயப்படாதீர்கள். நீங்கள் திருடர்கள்தானே நான் உங்களுக்கு உதவுகிறேன்" என்றாள். அதைக்கேட்ட திருடர்கள் ஒரு பிசாசு தம்மோடு இருப்பது நல்லது என நினைத்து அதைத் தம்மோடு சேர்த்துக் கொண்டார்கள்.

அவர்கள் அன்றிரவு ஒரு வீட்டில் ஆடு திருடப் போனார்கள். அப்போது காளி தான் உள்ளே போய் ஒரு ஆட்டைத் தூக்கிப் போடுவதாகக் கூறிச் சென்றாள். திருடர்கள் வெளியே நின்று கொண்டிருந்தார்கள். அப்போது காளி உரத்த குரலில் "இங்கே நிறைய ஆடுகள் உள்ளன. செம்மறி ஆட்டைப் போடவா அல்லது வெள்ளாட்டையா?" என்று கத்திக் கேட்டாள். திருடர்களோ "கொஞ்சம் குரலை அடக்கி மெதுவாகப் பேசு. நீ போடுகிற சத்தத்தில் யாராவது வந்துவிடப் போகிறார்கள்" என்றார்கள். காளியோ மறுபடியும் உரத்த குரலில் எந்த ஆடு வேண்டும் என்று கேட்டாள். அந்தக் குரலைக் கேட்டு ஆட்டின் சொந்தக்காரன் ஓடிவந்து "யாரடா அது. ஆட்டைத் திருடுவது?" என்று கத்தினான். திருடர்களும் காளியும் அங்கிருந்து ஓடியே போய்விட்டார்கள்.

அன்று நாள் முழுவதும் அவர்

கள் மூவரும் பட்டினி. அதனல் அன்றிரவு கோழிப் பண்ணையி லிருந்து ஒரு கோழியைத் திருடி வந்த அதைக் கொன்று வாட்டி சாப்பிடுவது என்று தீர்மானித் தார்கள். இருட்டியபின் மூவரும் கோழிப் பண்ணையை அடைந்தார் கள். காளியை அவர்கள் உள்ளே அனுப்பினர்கள்.



கோழிப்பண்ணைக்குள் சென்ற காளியும் உரத்த குரலில் "இங்கே பெட்டைக் கோழிகளும் சேவல் களும் ஏராளமாக இருக்கின்றன. எதைத் தூக்கிப் போட்டட்டும்?" என்று கத்தினள். அப்போது அத் திருடர்கள் "இதோபார். இப்படிக் கத்தாதே. கத்தினல் நேற்று ஆட்டுக் காரன்வந்தது போல இன்று கோழிப்பண்ணைக்காரன் வந்து விடு வான். பிறகு இன்றும் நாம் பட்டினி கிடக்கவேண்டிவரும்" என்றூர்கள். காளியோ அதைக் கேளாதவள் போல உரத்த குரலில் எந்தக் கோழி வேண்டும் என்று கேட் டாள். அந்தக் குரலைக் கேட்டு கோழிப் பண்ணைக்காரன் விழித் துக்கொண்டு தடியோடு ஓடி வந் தான். அதுகண்டு திருடர்களும் காளியும் சிட்டாய்ப் பறந்தனர்.

இரண்டு நாட்களாகத் திருடர் கள் எங்கும் தென்படவில்லை. ஆனல் அந்த ஊரில் மட்டும் ஏதோ ஒரு பிசாசு இரவு வேளைகளில் தெருக்களில் அலைகிறது என்ற வதந்தி பரவியது. மூன்றுவது நாள் திருடர்கள் ஒரு ஆட்டைத் திருடி வருவது என்று முடிவு செய்தார் கள். காளி தானும் அவர்களோடு வருவதாகக் கூறவே அவர்களோ "வேண்டவே வேண்டாம். நீ வந் தால் எங்களுக்குத்தான் ஆபத்து" என்று கூறி அவளை விட்டு விட் டுப் போய் விட்டார்கள்.

காளிக்கோ ஒரே பசி. அவள் காலையிலே அவ்வூர் வயல் ஒன் றில் புகுந்து அங்கிருந்த சர்க்கரை வள்ளிக்கிழங்குகளைத் தோண்டி எடுத்து சாப்பிடலானள். வயலில் வேலை செய்ய வந்தவன் பட்டப் பகலில் பிசாசு வந்ததைக் கண்டு உடனே ஊருக்குள் போய் பிசாசு விரட்டும் பூசாரியை அழைத்துக்

கொண்டு வயலுக்கு வந்தான்.

பூசாரியும் அட்டகாசத்துடன் வயலுக்குச் சென்ருன். அந்த வயலுக்குப் போக வயல் ஓரமாக இருந்த ஒரு சிற்ருேடையைக் கடந்தாக வேண்டும். பூசாரியால் அதைக் கடக்க முடியாததால் வயலின் சொந்தக்காரன் அவனைத் தன் முதுகில் சுமந்து கொண்டு அந்த ஓடைக்குள் இறங்கினுன்.

இருவர் வருவதைக் கண்ட காளி அவர்கள்தான் காட்டில் சந்தித்த திருடர்கள் என்று நினைத்து விட்டாள். அவர்கள் ஆட்டை எடுத்து வருகிருர்கள் என்று எண்ணி அவள் "நல்ல கொழுத்ததாகக் கிடைத்து விட்டதா? கொண்டு வா. வாட்டிச் சாப்பிடலாம்" என்ருள்.

வயலின் சொந்தக்காரன் பயந்து போய் "கொழுத்திருக்கிறதா இல்லையா என்பதை நீயே பார்த்துக் கொள்" என்று கூறித் தன் முதுகின் மீதிருந்த பூசாரியைத் தொப்பென்று கீழே போட்டு விட்டு தலைதெறிக்க ஓடிப் போனுன். பூசாரியோ திக்கு முக்காடி எழுந்து ஓட்டம் பிடித்தான்.

பொன்னுனுக்கு பிசாசு பற்றிய தகவல் தெரிந்தது. அவன் உடனே வயலுக்கு ஓடிப் போய்ப் பார்த்தான். அங்கேதான் கருப்புசாயம் பூசி விட்ட காளியைக் கண்டான். அவள் தன் பசியைப் போக்கிக் கொள்ள வள்ளிக்கிழங்குகளைப் 'படக்' 'படக்' கென்று ஒடித்துத் தின்று கொண்டிருப்பதைக் கண்டு அவன் அவள் மீது இரக்கம் கொண்டான். அவன் அவளை அழைத்துப் போய் போய்த் தண்ணீர் விட்டு நன்கு குளிப்பாட்டினுன். அவன் மனமும் மாறிவிட்டது. காளியிடம் இரக்கம்கொள். அவன் அவளை மணந்து கொண்டுவிடுவது என்று தீர்மானித்துவிட்டான். அதன் பிறகு புரோகிதரை அவன் அழைத்து வந்து முறைப்படி காளியை மணந்து கொண்டு சுகமாக வாழ்ந்தான்.



# எரிமலைகள்

மிக பயங்கர எரிமலை வெடிப்பு உலகில் கிமு 1470ல் ஏஜியன் கடலிலுள்ள தீரா என்ற எரிமலைத் தீவில் ஏற்பட்டது. அந்த எரிமலை 70 கன கி.மீ பொருள்களைக் கக்கியதாம். அதன் சக்தி 4 கோடி வெடிகுண்டுகள் போட்டதற்குச் சமம்.

உலகில் கக்கும் எரிமலைகளின் மொத்த எண்ணிக்கை 455. இவற்றில் 167 இந்தோனேஷியாவில் உள்ளன.

உலகில் மிகப் பெரிய எரிமலை ஹவாய்த் தீவில் உள்ள மௌனு லோவா. கடல் மட்டத்தின் அதன் அடி மட்டத்திலிருந்து அதன் உச்சிவரை அது 10 கி.மீ உயரம் (6 மைல்கள்) அதன் அடியின் குறுக்களவு 200 கி.மீ (124.28 மைல்கள்)



மிக நீளமான தீக்குழம்பு எரிமலையிருந்து பரவியது 1783ல். இந்த எரிமலை ஐஸ்லாந்தில் உள்ளது. அந்தத்தீக் குழம்பு சென்ற தூரம் 65.70 கி.மீ (43.5 மைல்கள்).

# In a class of its own

*Exclusive pencils for one and all,*




LION
**PREMIER®**
HB PENCILS

Sleek, Elegant, meant for executives and others, who like style A consistent dark tone for effortless writing - micronized lead for unbreakable points are what adds to its superiority.






LION
**PINKY®**
PENCILS

Lion 'PINKY' Pencils Pretty Perfect, Ideal for children because of its pretty designs & colours. Strongly bonded lead for unbreakable points and super smooth writing add to its attraction.






LION
**Geematic®**
DRAWING PENCILS

Lion Geematic Drawing Pencils. A unit for all Professionals like artists, architects, designers & engineers. Give expertise an edge. Available in 14 grades from H to 6 H and B to 6B HB and F





**LION PENCILS LTD**
95, Parijat, Marine Drive
BOMBAY 400 002

National-356

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 ஆகஸ்டு மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



K. S. Vijayaker

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூன் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : அமுதூட்டும் அன்பு

இரண்டாவது போட்டோ : அறிவூட்டும் பண்பு

பரிசு பெற்றவர் : வி. மணி, குன்னத்தூர் ஈரோடு வழி

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 36-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

---

The stories, articles and designs contained herein are exclusive property of the Publishers and copying or adapting them in any manner will be dealt with according to law.

# மங்கை

## இம்மாதம் படித்தீர்களா?




ஒவ்வொரு வரியும்
பெண்ணுலகுக்குப் பெருமையும்
உயர்வையும் தரும்
இணையற்ற இதழ்
**மங்கை**

இல்லற வாழ்வை
இனிமையாக்கும்
மகளிர் மாத இதழ்-
ஒவ்வொரு இல்லத்தரசியும்
தவறாமல் படித்து வரும் மாத இதழ்
**மங்கை**

ஒவ்வொரு வரியும் பெண்களுக்கு
வாழ வழி காட்டுகிறது;
ஒவ்வொரு பகுதியும்
இனிய இல்லறத்துக்கு உதவுகிறது
**மங்கை**

